# புத்தம் சரணம் கச்சாமி

**ஓ புத்தர் பெருமானே!**
வற்றாத நீர் வீழ்சிகளும், வளமான கங்கைகளும்
பொங்கிப் பாயும் எழிலான தேசத்தில் பக்திப் பரவசமாய்
"***புத்தம் சரணம் கச்சாமி***" பிரித் ஒலிகள்
வணங்கித் துதிக்க எங்கும் புத்தர் சிலைகள்

பேரினவாத நெஞ்சங்களிலோ- இன்றும்
இனவாத நெருப்பின் அணையாத கோலங்கள்
சீவர ஆடையிலே தமிழனின் காயாத குருதிக் கறைகள்

கங்கைகளும் கடலுமிருந்தும் இனவாத நெருப்பை
பேரினவாத மனங்களிலிருந்து அணைக்க முடியாத அவலம்
தம்மம் மறந்து இனவாதம் ஓதும் பௌத்த பிக்குகளால்
சிறுபான்மையினருக்கு நீதி கிடைக்காத துயரம்

குன்றுகளிலும் மலை முகடுகளிலும், போதிமரத்தடியிலும்
போதி மாதவனின் உருவச் சிலைகள்!
இனவாத உள்ளங்களிலோ கல்லில் எழுத்தாய்
பௌத்த சிங்களப் பேரினவாத நிலைகள்.


08
தமிழ்க் கூட்டமைப்பின் தேர்தல் விஞ்ஞாபனம்:
கொந்தளிக்கின்றது பௌத்த தேரர்கள் குழாம்
வடக்கு, கிழக்கில் இரத்த ஆறு ஓடும் என்று எச்சரிக்கை

கல்லில் உம்மை வடித்து –காலாவதியான சொல்லாய்
உம் போதனையை கணித்து -அகிம்சை வழியை
செல்லா காசாய் மதிப்பவர்-பௌர்ணமி நாட்களில்
பக்தர்களாய் மாறுவது விளம்பரமோ? வியாபாரமோ?

பௌர்ணமி நாட்களில்- வெண்ணாடைப்
பௌத்தர்களோ அகிம்சையின் தூதர்கள்
அமாவாசையை கொண்டாடுவதில்-இவர்களோ
கறுப்பாடை பூண்ட இனவாத அசுரர்கள்!

***பேரினவாதப் பெரும்பிணி ஈழத்தை வாட்டும் நேரம்***

ஓ காவிகளே, புத்த தர்மத்தின் புனித நிலையை பழிக்கும் போலிகளே
மதவாதம்- இனவாதம்-மொழிவாதம் பேசும் கபட வேடதாரிகளே
நடமாடும் தீச் சுவாலைகளாய் சீவர ஆடையில் உங்கள் வேஷம்
"***சிங்கள தேசம் பௌத்த சிங்களவர்க்கே***"உயிர் மூச்சான உங்கள் கோஷம்
***பகைமையைப் பகைமையால் தணிக்க முடியாது–பகைமையை அன்பினாலே தணிக்கமுடியும்***
***இதுதான் தொன்று தொட்டு வருகிற தர்மம்***
***புத்த பெருமான் சொன்ன வேதத்தின் சாரம்***

நாளும் எரியும் இனவாத நெருப்பு-இத்தேசத்திற்கு
நீங்கள் மூட்டிய அருவெறுப்பு
சிறுபான்மையினரை அடிமைப்படுத்திட
பேரினவாதத்திற்கு பூட்டிய விஷக் கொடுக்கு

உங்கள் கருநாக்குகள் மூட்டிய
இனவாத தீயில்- இன்றும்
வெந்தவையும்-வேகுபவையுமாய்
சிறுபான்மைத் தமிழ், முஸ்லிம் மக்கள்




நாம் வாழ்ந்த மண்ணையும், எம் வணக்கத் தலங்களையும்
புனித பிரதேசம் என்னும் பெயரால் சூறையாடும் நீங்கள்
கொள்ளையர்களாய் அல்லாமல்-தேசபக்தர்களாய்
அங்கீகரிக்கப்பட்ட அவலம்.

சிங்கள கட்சி மேடையெல்லாம் உங்கள் பிரசன்னம்
பிரித்தாய் ஓதுவதெல்லாம் இனவாத உச்சாடனம்.

"*சிறி லங்கா பௌத்த சிங்களவர்க்கே*"
இனவாத மந்திரத்தை தினம் ஓதி-எரி நெருப்பாய்
சீவர ஆடையிலும்,- வாளேந்திய சிங்கங்களாய்
***பேரினவாத மேடையிலும்*** உங்கள் பிரசன்னம்

அகிம்சையை-இம்சை செய்யும் அங்குலிமாலாக்களே
மழித்த சிரசும் தரித்த காவியும்-ஏந்திய பிக்ஷா பாத்திரமும்
வெற்று வேஷங்களே!-கருணா மூர்த்தியை-
காயப்படுத்தும் தேவதத்தனின் கபட நாடகங்களே!.

***மெய்யணியும் பொய்யெல்லாம்***
***மெய் ஞானநிலையைக் குறிக்காது***
***உண்மையே விடுதலையளிக்கும்.***

இராஜபோகம் துறந்து, ஞானயோகியாய் மலர்ந்த
ததாகதரின் சீடர்களே- ஞானத்தை தேடாமல்
கர்மயோகியாய் வாழாமல் , கட்சியமைத்து
அரசபோகம் தேடிட-பேரினவாதம்
உங்கள் "***தம்ம பதமான***" அவலம்.

ஜாதிக ஹெல உருமய, பொதுபல சேனா, ஜனசெத பெரமுன
தேசப்பற்றுள்ள தேசிய இயக்கம், இராவணபலய சங்க சபா
என ***உங்கள் தேசபக்த அமைப்புக்கள்.***

இனமத ஒற்றுமைக்காய் நீங்கள் ஆற்றிய பங்கோ
எள்ளிலும் சிறிது- இனவாதம் கக்கும் ஆர்ப்பாட்ட ஊர்வலங்களில்
தம்மத்தை எள்ளி நகையாடும் உங்கள் நடத்தையோ
மலையளவு பெரிது.-பௌத்த தர்மத்திற்கே இழிவு

உண்மையின் தரிசனமில்லா அகக்குருடர்களே
புத்த நிலை உங்களுள் இருந்திருந்தால்
இந்த தேசத்தை வாட்டும்-முப்பிணியும்
இன-மத- மொழி பேதம்தான் எனக் கண்டிருப்பீர்கள்:
மனந்திரும்பியிருப்பீர்கள்.




ஆயினும் நண்பர்களே இன்னமும் காலமுண்டு
மனமாறுங்கள் இத்தேச நலனுக்காய்
இன-மத-மொழி கடந்த
***"புத்த நிலையைத்" தேடுங்கள்***



இனவாத யாகத்தின் அசுர குருக்களாய் போலித் துறவிகள்
எரியும் அக்கினி குண்டமாய்த் தேசம்.
ஓதும் பிரித் ஒலியோடு ஒலிக்கும் பேரினவாதமும்
புனித பூமிப் பிரகடனமும்-சிறு பான்மை மக்களின்
நிலங்களைப் பறிக்க-உங்கள் இனவாத யாகத்தில்
பள்ளிவாயில்களும்-காளி கோயிலும் ஆகுதியாய் மாறிட
ஈழம் இன்றும் எரிகின்றது

அசோகவனச் சீதையாய்-தமிழ்த் தாய்
இன்றும் வாடுகின்றாள்.

பேரினவாதத்தால் வெளிறிய சீவர ஆடையை
சிவப்பாக்கிட -ஈழத்தமிழா இன்னும் கொஞ்சம்
இரத்தம் கொடுப்பாயா? மனம் வாடிட-இன்றும்
யாசிக்கும் புத்தர் பெருமான்

"Abstention from all evil, performance of good acts,
and purification of one's mind" this is the doctrine of the Buddha.

உண்மை நேர்மை,அஹிம்சை அடக்கமும்
உள்ளவர் யாரோ அந்த குற்றமற்ற அறிஞர்
உண்மையாகவே தேரர்
என்னும் பெயருக்கு உரியவர் ஆவார்.

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-4-03-2023

# புதிய கனவு

---

வாழிடமோ திறந்த சிறைக்கூடம், மரணத்தின் புதிய ஆய்வுகூடம்
கொல்லும் வெயிலில் காய்ந்து, கொட்டும் மழையில் தோய்ந்து
நோய்க்கும் பசிக்கும் விருந்தாகி மருந்தின்றி வீழ்ந்தவர் ஒருபுறம்
சொத்திழந்து சொந்தமிழந்து கற்பிழந்து கண்ணியமிழந்து
மன நோயுற்று மாண்டவர் மறுபுறம்

வீடுதலை வேண்டிய மண் அடிமையானது
சுதந்திரம் பாடிய குயில் ஊமையானது
வணங்கா மண் எங்கும் கலிங்கத்தின்அலங்கோலம்-
வீழ்ந்த உடலங்களிலும்-புதிய கனவாய்
மலரும் தமிழ் ஈழம்.

விழிக்கதவை திறவாமல் கண்ணீர் படையெடுக்கும்
இசைவடிவு ஏற்காமல்-அழுகை அபசுரமாய் அரங்கேறும்
கலைவடிவு இல்லாமல் -தேகம்-சோகத்தில் தேய்ந்தழியும்
உருவழிந்த இறைவனும் உருக்குலைந்த மானுடமாய்
இடைத்தங்கள் முகாம்களில் பரிணமிக்கும்.

மூடிய விழிகளைத்த தாண்டி கண்ணீரின் சோக ஊர்வலம்
வாடிய முகங்களைத் தாங்கி நடைப்பிணங்களாய் மானுடம்
அமவாசை இருளுக்குள் அஸ்தமித்த நிலவுகள்
கண்ணீர் குளத்தினுள் வாடிக் காய்ந்திட்ட விழித் தாமரைகள்

எங்கள் இரவுகள் தொடரலாம்-கனவுகள் காய்வதில்லை
எங்கள் உறவுகள் மாயலாம்-உணர்வுகள் மாய்வதில்லை
எங்கள் பாதைகள் மாறலாம்-
விடுதலைப் பயணம் முடியவில்லை

சிறையிருப்பினும் எங்கள் சிந்தையில் சுதந்திரக் கனவுகள்
எரியும் சிதைகளிலும் எங்கள் மனங்களில்
அடங்காத் தமிழனின் புதிய உயிர்ப்புக்கள்
பறை ஒலியும் எமை தூண்டும் போர் முரசங்கள்
பாதை மாறியும் முடியாத பயணமாய்
புதிய குருஷேத்திரங்கள்.

*எல்லாப் புகழும் இறைவனுக்கே*
*Pax Ravichandra - 29.3.2023*

# புதிய குருஷேத்திரம்

---

அழுது சிவந்த அஞ்சன விழிகள் கொழுனனைத் கூவிக் களைத்திட,
கள்ளிருக்கும் மலர்க் கூந்தல் கலைந்து மலர்கள் உதிர்ந்திட
அஞ்சாது போராடியதை உடைந்த வளையல்கள் சொல்லிட
அறுந்த மேகலையும், குலைந்த குங்குமமும்,
கலைந்து குலைந்த வண்ணச் சேலையும்
காமுகர் கொடுமையைச் சொல்ல-சிதைந்த
வண்ணமகள் உதிர்ந்த மலராய் இறந்து கிடந்தாள்

துளைத்து, துளைத்து கண்ணகியாள் உடல் புகுந்து
கோவலன் காதலை கொல்லத் தவித்துக் களைத்த குண்டுகள்
கற்பிற்கும் காமத்துக்குமான கொடிய யுத்தத்தைச் செப்பிட,
கூற்றுவனும், மாற்று வழியின்றி உத்தமியாள் உயிர் கவர்ந்து
ஆற்றொண்ணாத் துயரோடு அபலையின் மானம் காத்திட்டான்

காதலைச் சுவாசித்து கற்பை நேசித்தவள், சாதலைச்
சரணடைந்து சாகாவரம் பெற்ற காவியமுமிங்கே
வைகையில் விளையாடிய வண்ணக் கயலை-
நச்சுப் பொய்கையில் நீந்தவிட்ட அவலமுமிங்கே.

கண்ணகியிடம் -மாதவியைத் தேடிய கேவலக் காமுகர்கள்
பொன்னகையை விட்டுவிட்டு புன்னகையைக் கொள்ளையிட்டார்,
களைகளை விதைத்திட நற்கழனியை நாடிய கொடியவர்
பொன்விளையும் பூமியைப் வல்லாங்கு செய்து பாலையாக்கினார்

பிறன்மனை நோக்காப் பேராண்மை பிறழ
"இந்திய அமைதி காக்கும் படையை" அணிசெய்த
"துச்சாதன, துரியோதனப்" படையணி

விழிகளில் எதற்கு கண்ணீர் மாலை?
மொழிகளில் எதற்கு ஒப்பாரியின் ஊளை?
வெஞ்சினம் மூண்டெழ நெஞ்சினில் வெறிகொள் புலியே
காண்டீபத்தில் கணையேற்று
அருச்சுனா-இது புதிய குருஷேத்திரம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-4.-4-2023

# புதிய உலகம்

---

மானுடமே விழித்தெழு-நாளை உன் விடியலல்ல
நம்பிக்கைதான் உன் விடியல்

இனவாத இருளில் தேசம் மூழ்கிக் கிடந்திட
எரியும் டயர்களிலும், ஏகாந்த விளக்குக் கம்பங்களிலும்
ஏற்றி வைத்த தீபங்களாய் எரியும் மனித உடலங்கள் நாறி மணந்திட
இனவாதக் கார்மேகங்களால் ஈழமெங்கும் குருதி வெள்ளம்
நடமாடும் மனித வெடி குண்டுகளால் தேசமெங்கும் பூகம்பம்

வன்முறையின் வடிவங்களால்
மானுடம் உருக்குலைந்த அவலங்களுமிங்கே,
அடக்குமுறையின் கொடூரங்களால்
கொதிப்படைந்த மானுட எரிமலைகளுமிங்கே

அராஜகமாய், ஆயுதக் கலாச்சாரமாய், இயக்கமோதலாய்-
விடுதலைப் போராட்டத்தின் குரூரவிகாரங்கள்.
உயிர்களைக் கொன்று உடமைகளை அழித்திடல்
யுத்த நீதியானது-சத்தியம் கண் மறைந்து போனது

இல்லிடங்களும் ஆலயங்களும் குண்டுகளால் சிதைந்திட
இறைவனும் மனிதனும் அகதிகளாய் உருமாறிட
அழிவுகளின் இடிபாடுகளில் நம்பிக்கையும், ஆனந்தமும்
ஒன்றாய் உருக்குலைந்த அவலம்

காணமற்போனோர், அங்கவீனர், அனாதைகள்,
விதவைகள் அகதிகள் என யுத்தவெறியரின் மோகத்தால்
பரிணமித்த அங்கவீனச் சமூகம்
“தக்கன பிழைத்தலில்” தள்ளாடும் அவலம்

அமைதி மாநாடுகள் ஐந்து நட்சத்திர விடுதிகளில் தொடர்ந்திட
அகதி வாழ்வோ துன்பியல் முகாம்களில் தொடர்கதையானது.
உல்லாசத் துறைக்கு சிறுவர் துஷ்பிரயோகம் சாபமானது
இளைய சமூகத்திற்கு போதைவஸ்து ஆலகால விஷமானது

“வாக்களிக்கப்படாத வன்னி” நோக்கி
யாழ் மக்களின் அவலயாத்திரை-ஒருபுறம்,
யாழ்நகரை இணைக்க-இராணுவத்தின்
முடிவுறா முற்றுகைகள் மறுபுறம்

சாமகோஷா-சமாதானத்தின் தொனி
அமைதி வேண்டிட,
ரணகோஷா-1-5,யுத்தத்தின் சப்தம்
போரை வேண்டியது.

போதைவஸ்து, பயங்கரவாதம், பாதாள உலகம்
எனப் புதிய நரகங்கள் உண்டாகிட
எரியும் தீயில் மாய இன்பம் தேடி-வீழ்ந்து
மடியும் விட்டில் பூச்சிகளாய் இளந் தலைமுறை

யுத்தத்தால் சுடுகாடாய் மாறிய நாடு
வாழ்வோ நடைபிணமான சாபக் கேடு

பொய்மைக்கு புதுக் கோலமிட்டு
அரியணை அமர்ந்த இனவாதக் கட்சி,
நிறம் மாறிய பூக்களிலும் சுவாசத்தை வாட்டிடும்
மாறாத இனவாதம். -கூட்டணியாய்
நாடாளுமன்றம் சென்ற தமிழ்க் கழுதைகக் கூட்டம்
விதையடிக்கப்பட்டு “வீடு” திரும்பிய அவமானம்

இலவு காத்த கிளிகளுக்கு ஏமாற்றம் பழக்கதோஷம்.
கொள்கைகள் எதற்கு கோஷங்களிருக்க,
அரசியல் விபச்சாரத்தில்
வாய்மை எதற்கு ஏமாளிச் சமூகமிருக்க.

காணாமற்போனோரைக் கணக்கெடுக்க-முதுகெலும்பற்ற
நீதித்துறையின் அண்ணக ஆணைக்குழு-இனவாத
இருளில் தடுமாறும் “குருட்டு” நீதி தேவதை

இனவாதம் மூட்டிய அணையாத நெருப்பில்
அரசியல்வாதிகளும், ஆயுததாரிகளும் குளிர் காயந்திட
எல்லாமிழந்து, ஏகாந்தத்தில் “துன்புறும் இயேசுவைப்போல்”
“(செஞ்)சிலுவையில்” தொங்கியது சிறுபான்மைச் சமூகம்,

முகர்ந்தபின் தெரிந்தது வெண்தாமரைகளும்
வெற்றுக் காகிதப்பூக்களென்று,
வீழ்ந்தபின் புரிந்தது-வெண்புறாவும்
வெறும் காகிதப் பொம்மையென்று.

பொய்மை மறைந்திட-உண்மையின் ஒளியேற்றுவோம்
இனவாதம் மறைந்திட-நீதியை நிலை நிறுத்துவோம்
அராஜகம் ஒழிந்திட-அமைதியை மலரச்செய்வோம்

புதிய உலகம் படைப்போம்
பூமியெங்கும் மானுடம் ஒன்றே
நீதியும் ஒன்றே நியாயமும் ஒன்றே
என்றே நாம் முழங்குவோம்

இனங்களில் உயர்வு தாழ்வுகளில்லை
மதங்களில் பிரிவு பேதங்களில்லை
ஓடும் குருதியும் சிவப்பே-நம்முள்
உலாவும் சுவாசக் காற்றும் ஒன்றே

ஒன்றே குலம், உண்மையே தெய்வம்
அன்பே வேதம்-அமைதியே நல் நாதம் என்றே
எல்லோரும் வாழ-
வாழ்வைக் கொண்டாடுவோம்?-

**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
Pax Ravichandra-1-4-2023

# புதிய பாடல்



புதைத்தாலும் முளைத்தெழுவோம், எரித்தாலும்
உயிர்த்தெழுவோம். மரணமறியா மானுடம்
நாம் சிவமே, மானுட மனங்களில் எம் குடியிருப்பு
மனித விடுதலையில் எம் குதூகலிப்பு.

விடமாலை சூடி -கனல் கக்கும் ஆயுதமேந்தி
ஈழத் தமிழர் விடுதலைக்காய்-கூத்தன் ஆடும்
உருத்ரதாண்டவம் எம் விடுதலைப் போராட்டம்

நெற்றிக்கண், அடிமைத்தனத்தை சுட்டெரிக்க-குண்டுகளின்
இடி முழக்கம்-உடுக்கை ஒலியாய் பூமியை அதிர வைக்க
நெருப்பாற்றில் நீராடி சுடுகாட்டில் இளைப்பாறும் குறும் பயணம்
விடுதலைப் போராளி எம் வாழ்க்கைப் பயணம்

அக்கினிப் பூக்களால் எம் கர்ச்சனைகள்
குருதிப் பூக்களால் எம் அர்ச்சனைகள்-எம் தாயகச்
சுதந்திரம் நாம் கொண்டாட சுதந்திரப் பெருநாள்
பேரினவாத அரக்கனை வீழ்த்திய தீபாவளித் திருநாள்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-28.3.2023

# புதிய உதயம்

---

தாயகமே குருஷேத்திரமானஅவலமிங்கே
வாழிடமோ சுடுகாடான சாபமும் இங்கே.
அன்னையர் வயிற்றினிலோ அணையாத் தீ
கன்னியர் கண்களிலோ வற்றாத சோகநதி

தீயாடும் டயர் புகையினால் தென்றலினும்
பிணவாசம் , போராளிகளின் இரத்தால்
அப்பாவிகளிடமும் சுதந்திர தாகம்

இரண்யனை அழித்திட்ட நரசிம்ம அவதாரம்
சிங்களப் பேரினவாதத்தை எதிர்த்திட்ட
தமிழ் ஈழ விடுதலைப் புலிகளின் போராட்டம்

குண்டுகளின் வெளிச்சங்கள் உதயங்கள்ஆகாது
குருதியாறுகளால் சுதந்திர தாகம் தீராது
போராளிகளே!.பயங்கரவாதம் நீதியாகாது

பகைமையைப் பகைமையால் தணிக்க முடியாது
பகைமையை அன்பினாலே தணிக்க முடியும்
என்றுமுள்ள தர்மம் இதுவே

மனிதம் வாழப் புதிய உதயம் தேவை.
மறுபடியும் உயிர்த்து வாழ-போராளிகளே
பயங்கரவாதிகளே- அன்பே கீதை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-1-4-2023

# புது வசந்தம்

---

அடங்காத் தமிழினம்-தம் ஆளுமுரிமைக்காய்
போராடிய விடுதலைப் புலியினம் அடங்கிட ,
அழித்தொழித்தார்-ஆயுதபோராட்டத்தின்
ஆணிவேரை, மாவீரனைக் கொன்றழித்தார்

ஆயிரமாயிரமாய்க் கொன்றொழித்த உடலங்களை
தடயங்களின்றி எரித்தழித்தார்
சிறைபிடித்த சருகுப் புலிகளை புனர் வாழ்வழித்தே
ஆட்டு மந்தைகளாய் உருவழித்தார்

சரணடைந்த தலைவர்கள்
" ***வீர சொர்க்கத்தில்***" வாழ வழி சமைத்தார்
அழிவின் தடயங்களை அழித்திட
அபிவிருத்திப் பணியெடுத்தார்

ஆர்ப்பரிப்போடு வாளேந்திய சிங்கம்
வெற்றி வாகை கொண்டாடிட
வடக்கின் வசந்தம் மலர்ந்தது.

சலுகைகள் ஈந்து உரிமையைச் சுரண்டி
அடிமைகளாய் வாழ வாக்குகள் வேண்டி
பள்ளிகள்-சாலைகள்
பாலங்கள்-புகையிரதப் பாதைகள்
வைத்தியசாலைகள்-என "***அபிவிருத்தி***"

நிலங்கள் பறித்து வளங்கள் சுரண்டி
அச்சத்தை ஊட்டிட-
வடகிழக்கெங்கும் இராணுவ விஸ்தரிப்பு

***வடக்கின் வசந்தம்-தெற்கின் சுகந்தமோ?***
"தமிழர் சுயநிர்ணயம்"
வெறும் கனவாய் பழங்கதையாய்ப் போயிட
விலங்கியல் பூங்காவாய் விரிந்த சிறையில்
வாடிடும் ஈழத் தமிழினம்

பாடல் மறந்த கூண்டு குயில்கள் கேவிக் கரைய
உறுமல் மறந்த குட்டிப் புலிகள் கூண்டுக்குள் உலாவி
தூங்கிக் கிடந்தன -தம் இருப்பை மறந்து

பலியான பல்லாயிரம் அப்பாவிகளின் இரத்தம்
இறைவனைக் கூவியழைத்திட, நியாயமான
நீதி விசாரணைக்கு வேண்டுகோள் விடுத்த
சர்வதேச மனித உரிமை அமைப்புகள்

அழிவுகள் போரில் சகஜம்-
எவர்க்கும் பதில்கூற -சுதந்திர
எம்மரசுக்கு கடப்பாடில்லை
சிங்கள அரசின் விதண்டாவாதம்

***வடமாகாண சபை தேர்தல் வந்தது***

(வட மா) காண சபையில்-
விடுதலைக் கானத்தின் அரங்கேற்றம்!
அரவணைத்தும் அடிமையாகாமல்
அச்சமூட்டியும் பணியாமல்-வீழ்ந்தும் மடியாமல்
தென்னிலங்கையைக் கலக்கிட
விதைப்புற்றதுபோல் உயிர்பெற்று எழும்
வீர தமிழினத்தின் புதிய உருமாற்றம்!

வெற்றி விழாவாய் தொடங்கிடும்
விடுதலையின் புதுப்பயணம்
தமிழினத்தின் புது வசந்தமோ?

அடங்குமோ ஈழத்தமிழினம்?-சிங்களப்
படைகண்டு தொடை நடுங்குமோ?
சுற்றிலும் தீ சூழ்ந்து பரவினாலும்
சொந்தமெல்லாம் வெந்து கருகினாலும்
நித்தமும் குண்டு வீச்சு நிகழ்த்தினாலும்
அஞ்சிடாது அடங்கிடாது
அடிமை வாழ்லை என்றுமே ஏற்றிடாது
ஈழத் தமிழினம்.

***விலங்கியல் பூங்காவெங்கும் விழிப்பின் ஆரவாரம்***
***கர்ஜனையும் உறுமலுமாய் இருப்பின் இனிய நாதம்***

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-4-03-2023

# புத்துயிர்ப்பு

---

சட்டமும் நீதியும் இராணுவத்திடம் சரணடைந்திட-ஒட்டுக்குழுக்கள்
காட்டிக் கொடுத்திட, பட்டத்துக்கு வந்த துட்ட கமுனுவும்
பட்டத்து யானையில் வெற்றிப் பவனி வர, சிங்கக்கொடியையும்,
சீவரஆடையையும்  சிவப்பாக்கிய தமிழ் இரத்தம்
ஈழ மண்ணையும் சிவப்பாக்கியே இறைவனைக்
கூவியழைத்து களைத்த மனிதம்

எரியும் டயர்களை யாக குண்டமாக்கி
இராணுவம் செய்யும் பூத யாகத்தில்
ஆகுதியாய் இளந்தமிழர்கள்

உருகும் விழிகளோடு உறவுகள் செய்யும்
கண்ணீர் வேள்வியில் ஆகுதியாய் அறுந்துவிழும்
தொப்பிள்- தாலி உறவுகள்

முட்டிகளை சுட்டு நொருக்கி
குருதி நாளங்களை சிதைத்து வற்றிக் காய்ந்த
கண்ணீர் ஊற்றுக்களை திறந்து-வெற்றிக்கோஷத்தோடு
வெறியாட்டம் போடும் இராணுவம்

சித்திரவதையால் உருக்குலைத்த தமிழ் புத்திரரை
எரியும் டயர்களில் இட்டு சுட்டுப் பொசுக்கிட
வெண்நீறாய் பரவிக் கிடக்கின்றார் எம் வீரர்

சொந்தங்களே கலங்கவேண்டாம்
கண்ணீர் சிந்தவேண்டாம்-செந்நீர் சிந்துங்கள்
சிந்தனையில் புரட்சி நெருப்பேற்றுங்கள்
மாண்ட இவர்கள் மீண்டும் உயிர் பெறட்டும்

ஒரு மாலைக்குள் வாடும்
பூக்களை துாவாதீர் பூமாலைகள் சூட்டாதீர்
புரட்சி பாக்களை பாடுங்கள்
மாண்ட எம் தோழர் மீண்டெழட்டும்

மண்ணில் புதைக்காதீர் கங்கையிலோ கடலிலோ
சாம்பலைக் கரைக்காதீர், சொந்தங்களே நெஞ்சில் விதைத்து
நீறாய் நெற்றியிலும் மார்பிலும் பூசுங்கள், மாண்டவீரரும்
மீண்டெழட்டும், ஓய்ந்த எம் ஆயதப் போராட்டம் உயிர் பெறட்டும்

நண்பர்களே
நீங்கள் வெட்டியெறிந்த- எங்கள் கைகளும்
அடிமைத்தளை உடைத்திட ஆயுதமேந்தும்
வெற்றி கொடி பிடித்தே வீறு நடைபோடும்

நீங்கள் பிடுங்கியெறிந்த எங்கள் விழிகளும்
சுதந்திர ஈழத்தை நாளை பார்க்கும்
நெரித்துக் கொன்ற எங்கள் குரல் வளைகளும்
ஈழதேசிய கீதத்தை  நாளை பாடும்

சுட்டுத் தீய்த்த உடலங்களும் உயிர் பெற்றே
சுதந்திரம்- சுதந்திரம்
என்று ஆர்பரித்தே ஆடி மகிழும்-தோழர்களே
எந்த ஆயுத வெற்றியும் நிரந்தரமல்ல்
அன்பின் வெற்றியே என்றும் நிரந்தரம்




அன்பே சுதந்திரமானல் ஒற்றுமையோ நிரந்தரம்
யுத்த வெற்றியில்-அகதிகளே மிஞ்சுவர்
அபலைகளோ கண்ணீரில் மூழ்குவர்

வெற்றி பகைமையை வளர்க்கும்
தோற்றவன் துயரத்தில் வருந்த
வெற்றி, தோல்வி கடந்தவன்-
அமைதியில் களிக்க
யுத்த வெற்றி நிரந்தரமல்ல-அன்பினால்
இதயங்களை வெல்வதே நிரந்தர வெற்றி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-08-04-2023

# புயலும் அமைதியும்

---

அமைதி காக்க வந்த படை-அழிவை
வருந்தி அழைத்ததுமேனோ?
அன்னையரைக், கன்னியரைக் கற்பழித்து
அப்பாவிகளைக் கொன்றழித்ததுமேனோ?

வாழிடமும் வணக்கத் தலங்களும் பாழாகிக்
கூகை கோட்டான் குடியிருப்பாய் மாறிட
வேங்கைகளை விலங்குகளாய் வேட்டையாடி
தமிழ் ஈழக் கனவை அழித்திட- மூண்ட போர்.

வீரம் விளை நிலத்தில் விழுந்தவர் முளைத்திட,
எரிநெருப்பில் தேகத்தை உருக்கியவர் உயிர்த்திட,
விடுதலை மந்திரமோதி சுதந்திர வேள்வி யாத்தவர்
சூளுரைத்தே விடமாலை சூடிக் களமாடினார்

வேலிகளே பயிர்களை மேய்ந்திட-வெகுளிகளோ
வல்லூறுகளை விருந்திற்கு அழைத்திட
நெறிகெட்ட அமைதிப் படைக்கு நெற்றியில் வீரத்திலகம்,
மார்பில் தங்கப்பதக்கமும் சிங்களம் சூட்டி மகிழ்ந்திட
அமைதிப்படையே அழிவுச் சூறாவளியானது
காவல் தெய்வங்களே-இரத்தக் காட்டேறிகளானது

விடம் சூடிப் போராடும் வெம்புலியே வெறிகொள்ளடா
நடமாடும் எரிமலையாய்க் கரும்புலியே உருமாறடா,
அம்புலிதான் தேய்ந்தழிந்தாலும், அலைகடல் வற்றிக் காய்ந்தாலும்
தேயாது, காயாது நம் நெஞ்சுற்ற சுதந்திர தாகம்
உயிர் மூச்சில் கலந்த எம் சுதந்திர மோகம்

ஞாயிறுக்கு அஸ்தமனமுண்டு,
திங்களுக்கு அமாவாசையுண்டு-வெம்புலியே
புலிகளின் தாகம்-தமிழ் ஈழத் தாயகம்-அறிவாய்
ஓய்வில்லை உறக்கமில்லை உணர்வாய்.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-1-4-2023

# இரத்தச் சுவடுகள்

---

இரத்தம் சிந்தும் யுத்தம் வேண்டிப்பெற வரமல்ல
நமக்கு கிடைத்த சாபம்-தேழர்களே!
தேச விடுதலைக்காக நாம் ஏந்திடும் துப்பாக்கி
நமக்கும் எமனாகலாம்- நம்முயிரும் பறிபோகலாம்

இரத்தமின்றி விடுதலை இல்லை
நம்மாலன்றி நமக்கு விடுதலையில்லை
ஒற்றுமையே நம் பலம்

நாம் சிந்திடும் இரத்தம் நம் மண்ணைச் சிவப்பாக்கட்டும்
மலரும் பூக்களும், விளையும் பயிர்களும்-நாம் மடிந்தாலும்
நாளைய நம் சந்ததிக்கு தமிழ் பற்றை ஊட்டட்டும்
எம் போராட்டம் புதிய சரித்திரம் எனக் கூறட்டும்

எத்தனை காலம் -சூரியன் அவர்கள் திசையில் உதிப்பது?.
எத்தனை காலம் எல்லா நதிகளும்
அவர்கள் மண்ணை செழிப்பாக்குவது?

எத்தனை காலம் நாம் அடங்கிக்கிடப்பது?
என்று நாம் எழுந்து நிற்பது? நிமிர்ந்து நடப்பது-?
கூனி நடந்து கூன்விழுந்துபோன உடல்.
நிமிர்ந்து நிற்க துடிப்பது நம் உரிமை

எங்கள் அழுகை தமிழில்-எம் தொழிலோ
அரசமொழிச் சிங்களத்தில்

சிங்களம் கற்றால் வேலை-செந்தமிழன்
பல்கலைகழக கல்விக்கோர் தரப்படுத்தல்
இது என்ன தர்மம்? நியாயம்

எங்கள் நிலங்களில் அவர்கள் குடியேற்றதிட்டங்கள்
எங்கள் அரசமரநிழலில்
புத்த விகாரைகளின் புதுத்தோற்றங்கள்.

எங்கள் வான்மேகங்களில் சோக மழை
எங்கள் வயல் வெளிகளில் வாட்டும் காட்டுக் களை
எங்கள் தென்றல் புயலாய் மாறிட-எங்கும்
அழிவின் காலடித்தடங்கள்

எங்கள் இரவு வானின் புதுநிலவை-அவர்கள்
திருடிக்கொண்டார்கள்-எங்கள் குயிலின் கானத்தை
விடுதலை கோஷமென்று தடைசெய்தார்கள்
எங்கள் கடலில் சிங்கள மீனவர்-உரிமையோடு
எம் மீன்களைப் பிடித்துச்சென்றார்கள்

விமானப்படை முகாம் விஸ்தரிப்பால்
எங்கள் சேமக்காலையும் இன்று பறிபோனது
முன்னோர்கள் உறங்கிட்ட புனித பூமி
ஓடு பாதையாய் மாறிட எம் முன்னோர் சமாதிகள்
புதைந்து மண்ணோடு மண்ணாயின.

வடக்கிலும், கிழக்கிலும், வயதான பஸ்களும்
பழுதான ரயில்களும் ஓடிட, அவர்கள் பயணிக்க
தெற்கிலும், மேற்கிலும் நவீன போக்குவரத்து வண்டிகள்

தூங்கியதுபோதும்-தோழர்களே விழித்தெழுங்கள்
கூவியழைத்துப் படை திரட்டினோம்
நின்று போராட நிரந்தர இராணுவமில்லை
கொரில்லாப் போர்முறை எம் போராட்ட வடிவானது

இரத்தம் சிந்தித் தொடங்கிய விடுதலை விதைப்பு
எம் கண்ணீர் சுவையை அவர்களும் சுவைத்திட
சிங்கள, தமிழ் இரத்தங்கள் சிவப்பென்றும்,
ஒன்றென்றும் அவர்களும் அறிந்திடப் பாடமானது

பணமில்லை வங்கிகள் கொள்ளைபோயின-ஆயுதமில்லை
காவல் நிலையங்கள்-தாக்குதலுக்கு உள்ளாயின

எங்கள் சேவல்கள் கூவுகின்றன-ஆனால்
பொழுதுதான் விடியவில்லை-எங்கள் பசுக்கள்
புல்வெளிகளில் மேய்ந்தாலும் மாலை வீடு
வருவதில்லை, பொறி வெடிகளால் முடமாகின்றன.

எங்கள் பூவனங்களில் தேனீக்கள் இல்லை
வண்ணத்துப் பூச்சிகளும் வருவது இல்லை
எங்கும் காகிதப் பூக்களே

எம் குயில்கள் கானம் மறந்திட-காலைப்பொழுதில்
காக்கைகள் மட்டும் இன்னும் கரைகின்றன.
விருந்தாளிகள் வருவதில்லை -விருந்தக்கும்,
மருந்துக்கும் நாளும் அல்லாடும் மக்கள் நாம்.

விருந்தோம்பி வாழ்ந்த சமூகம் விடுதலைக்காய் போராடி
முறிந்த பனையும், தென்னையுமாய் விழுந்து கிடக்கின்றது.
ஒற்றுமை குன்றி ஒருவரோடு ஒருவர் போராடி அழிந்த
விடுதலைப்போராட்டம் விட்டுச்சென்ற அழிவுத் தடங்களாய்
விதவைகள், அநாதைகள், அங்கவீனர் அகதிகள்.

ஈர விழிகளோடும், இமயச்சுமைகளோடும்
இடிந்த ஆலய முன்றலில்
எம் விடியலுக்காய் காத்திருக்கின்றோம்
விடியல் வருமா? சொல் மனமே!

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-21-05-2023

# சாபம்

---

ஓ என்தெய்வீக திருநாடே
முக்கண்ணண் சிவனும், முதல் மனிதன் ஆதாமும்
ஞானசோதி புத்தர் பெருமானும்
கால் தடம் பதித்த ஆன்மீகப் பூமியே



மகிந்த தேரரால் மதமாற்றம் பெற்று
மகிந்த சிந்தனையால் மதவாதத்திடமும்-
சிங்களப் பேரினவாத்திடமும் சோரம் போய்க்-கல்லாகி
மனித உரிமைகளை உணர்வுகளை இழந்திட்ட
யாரிட்டார் தாயே உனக்கு இந்தச் சாபம்?

தர்மத்தை கண்டும் காணா நிலையில்
பேரினவாதிகளுக்கு தாயான நீயும்
கண்களைக் கட்டிக்கொண்ட
மற்றோர் குருட்டுக் காந்தாரியா?

அரக்குமாளிகைக்கு எரியுட்டிடும் அவலமாய்
இரவிலும்-தமிழர் குடிமனைகளுக்கு
குண்டு பொழியும் இழிந்த கௌரவர்களும்
உன் மைந்தர்களா?

ஆயதச் சூதாட்டத்திற்கு அடிமையாகி துன்புறும் நிலையில்
தமிழ் ஈழ மங்கையும்-இன்னோர்
திரௌபதியாய் துகிலுரியப்படுகின்ற அவலமிங்கே
வலிந்து யுத்தம் திணிக்கப்பட்ட நிலையில்
பறிபோன உரிமைக்காய் -சிறுபான்மைத் தமிழரும்
பாண்டவர்களாய் போராடுகின்ற வீரமுமிங்கே.

அனைத்தும் இழந்த நிலையில்- அகதிகளாய்
பிறந்த மண்ணில் முறிந்த பனையின் நிழலில் கூட
இளைப்பாற வழியின்றி-புலம்பெயர்ந்து
புகலிடம் தேடும் அகதியாய் ஈழத்தமிழர்

பேரினவாத்திடம் சோரம்போய்
சாபத்தால் கல்லான நீயம்-கோபமுற்றா
கருணைவடிவான புத்தருக்கும்
காணுமிடமெல்லாம் சிலை வைத்து
பழி தீர்க்கின்றாய்-

கௌதமபுத்தரும் கல்லான துயரம்
தம்மபதமும் வெற்று நூலான அவலம்

ஆடுகளைக் காத்திட அரசர் பிம்பிசாரனின்
யாகத்தை நிறுத்திய கருணை வள்ளலால்
மகிந்தாவின் யுத்த யாகத்தை நிறுத்தி
அப்பாவித் தமிழர் உயிர்களைக் காத்திட
பௌத்த மனங்கள் கல்லான நிலை இங்கே

தம்மபதத்தைப் பின்தள்ளி
இனவாத யுத்தத்தை-முன்னெடுக்கும் நிலையில்
அண்ணலே -உன் சீடர்களும்
பழிவாங்கும் "அங்குலிமாலாக்களாய்" உருமாறிட
காவிகூட இங்கே இனவாத சீருடையானது
யுத்தம் கூட இவர் மொழியில் விடுதலையின் வழியானது
சீவர ஆடையும் தமிழன் இரத்தத்தால் சிவாப்பானது

இனவாதச் சூதாட்டத்தின் புதிய சகுனிகளாய்
காவியுடுத்த போலிகள்
திரிபீடத்தின் முடிசூடா மன்னர்களாய்
தேவதத்தன் சீடர்கள்

மனை சிதைந்து, மனைவியும் பிள்ளைகளும் இறந்திட
மூப்பு-பிணி-சாவை சிலுவையாய் சுமந்து
காயமுற்ற காயத்தோடு-கானகத்தே
முறிந்த பனையின் கீழ் குந்தி
முற்றுமிழந்த நிலையில் "ஞானம்" தேடுகின்றார்
ஆயுதத்திடம் சரணடைந்த அஞ்ஞானிகள்
போதிமாதவனே-அருள்புரிவாய்

புத்தம் சரணம் கச்சாமி
தம்மம் சரணம் கச்சாமி
சங்கம் சரணம் கச்சாமி

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra*

# சாதியும், அகதியும்

---

இந்திய அமைதிகாக்கும் படைக்கும்,
தமிழ் ஈழ விடுதலைப் புலிகளுக்கும் இடையே,
முறுகல்கள் முற்றிக் கசந்து நஞ்சாகிட
யாழ்குடாவைச் சூழ்ந்திட்ட யுத்த மேகங்கள்
"***இரத்தம் சிந்தும் யுத்தப் பொழுதுகள்***"

தூறலாய்த் தொடங்கிய மழை
வெட்டும் மின்னலும், வீசும் காற்றும், குமுறும் இடியும்
கொட்டும் மழையுமாய்ப் பூமியை அதிரவைக்க,
பொத்தல் கூரைவழியே ஒழுகும் மழை.

பாரிய கண்ணி வெடிச்சத்தம் ஊரை அதிரவைக்க,
ஷெல் வீச்சும், துப்பாக்கிகளும், எறிகணைகளும் பதிலுரைக்க,
கூரைகள் சிதறி, குடிசைகள் தீப்பிடிக்க, வீடுகள் சிதைந்து,
விளைநிலங்களழியத் தொடங்கிய கொடிய யுத்தம்.

வீட்டை விட்டு, உயிரைக் கையில் பிடித்துக்கொண்டு
வீதிக்கு வந்த மானுடம் புகலிடம் தேடி ஓடிட,
குண்டடிபட்டு மாண்டவரும், காயம் பட்டு வீழ்ந்தவரும்
குப்பைகளாய் வீதியில் கிடந்தார்

கண்ணீர் மல்க சுற்றி நின்று கதறிடும் சொந்தம்
காயமுற்றவரைத் தூக்கிச் சுமந்து கடுகி நடந்து
அகதி முகாமை தேடி ஓடிடும் பந்தம்.

ஓடிவந்த தெருநாய்களும் முகாமிற்குள்
உரிமையோடு உள்நுழைய-ஒரு கணம்
வாயிலில் வாடி நின்றது –சாதியத்தால்
வாழ்வை தொலைத்த தாழ்ந்த பறைச்சாதி.

இட்ட அடியில் துரத்திடும் மரணபயம்,
எடுத்த அடியில், சிறுமைப்படுத்திடும் சாதியம்,
உயிரை கொல்பவரும், வாழ்வை கொன்றவரும்
இருபுறமும் கருக்குள்ள வாளாய் வருத்த,
இருதலைகொள்ளி எறும்பாய் ஆன மனிதசாதி.
நுழைவதா வேண்டாமா எனத் தயங்கி நிற்கத்
தடைபோடும் சநாதன தர்ம நீதி

வெளியே உயிர் குடிக்கும் கணைகள்
அனல் கக்கி ஆராவாரிக்க-உள்ளே **சாதியக்கனல்**,
பார்வையால் ஏழைகளை எரித்து இம்சிக்க,
நுழைந்தவர் ஒதுங்கிப் பதுங்கிப் பறைநாய்களாய்
தாழ்வாரங்களில் நனைந்து நின்றார்.

குண்டடிபட்ட அன்னையைக் கூட்டி வந்தவளும்,
மரணபயம் மனதை நெரிக்க-மனமுருக
கதவைத் திறவுங்கள் ஐயா-என்
அன்னை காயமுற்றுள்ளார் கதறி அழுதாள்.

இடர் வந்தபோதும் இழிந்த சாதியின் திமிர் அடங்கவில்லை-
படித்த திமிரால் உயர்சாதியை பணிந்து தொழ மனமில்லை,
குமுறி, குரைத்து கதவண்டை வந்தவர்கள்
கண்டார் மடியில் கிடத்தி முந்தாணையால்
அன்னையின் முகம் துடைத்து அழும் பேரழகை.

மழைத்துளி படிந்த முகம் பனிமலரோ, மயக்குவது மதுமலரோ,
மலர்விழியோ, நெஞ்சை துளைப்பது வேல்விழியோ,
சரிந்த மாராப்பில் விம்மித் தணிய அசைவது
பொற்குடங்களோ-எரிமலையாய்
காமம் நெஞ்சில் குமுறிக் கொதிக்க மயங்கினார்

அதிப்படையிலும் கொடிதாய் அழகு உயிரைத் தாக்க,
நிலைகுலைந்த சாதிப்பேயும் நில்லாமல் ஓடி
காமப்பேய் மனதை ஆட்கொள்ள,
தாள் திறக்க தாழ்ந்து வந்த உயர்சாதி.

விலகிய முந்தானைக்குள் விம்மிப்பூரித்த மார்பகங்கள்
கதைகளாய் நெஞ்சைத் தாக்க,-வேல்விழிகளோ,
ஆண்களைப் புள்ளிமான்களாய் சாய்க்க,-செவ்விதழும்,
செந்தேன் மலர்முகமும் சாதிப்பேயை ஓட, ஓட விரட்ட,
நெஞ்சைக் காமப்பேய் அலைக்கழிக்க- காமன் கணைபட்டு
புண்பட்டு ஓடி வந்து தாள் திறந்த உயர்சாதி.

வீறாப்பாய் நின்ற வேளாளச் சாதிவெறியரும்,
மாரப்பின் அழகில் மயங்கி மல்லாக்காய் வீழ்ந்திட்டார்,
சாதியத்தால் மானுடத்தை அடக்கி ஆளும் சாதியும்
காமன் கணைபட்டு சறுக்கி வீழ்ந்திட்டார்.

மாமுனிகளும் மயங்கி தவம் துறக்கும் பேரழகு,
மறவழி சாதியப் பேய்களைத் தாக்கிட,
துச்சாதன விழிகள் துகில் உரிந்து,
சல்லாபம் செய்ய துணிந்ததே

கண்ணீர்மாலை கோர்த்த கோதை, கண்ணனைக்
கூவியழைதாள் , சத்தியம் சாய்க்கட்டும் என்றே
காமப் பேய்களுக்குச் சாபமிட்டு-பறைநாய்கள்
வாலாட்டி வரவேற்க, தாயோடு தாழ்வாரம் ஓதுங்கி
தன்னிலை தாழாமல் நின்றாள்.

பஞ்சபூதங்களுக்கும், படைத்த இறைவனுக்கும் சாதியில்லை
சாதியத்தால் தாழ்ந்திட்ட சாதி
*ஒன்றே குலம் ஒருவனே தேவன்*
முதுவாக்கை இகழ்ந்திட்ட அநீதி

சிங்களம் அடிமைகொண்டும் ,
இந்திய அமைதிப்படை அழிக்கக்கண்டும்,
சாதியம் ஓதிடும் சாதி,
விடுதலைக்காயப் போராட விழித்தெழுந்தும்
தன் சகோதரனுக்கு உரிமை வழங்காத அநீதி

வேண்டுமோ நமக்கொரு நாடு?,
சாதிப்பேய் கூத்தாடும் காடு,
மாண்டாலும் தீராத சாதி வெறி
மறை ஓதியும் நீங்காத ஜாதிவெறி.

***சாதிகள் இல்லையடி பாப்பா-குலத்***
***தாழ்ச்சி உயர்ச்சி சொல்லல் பாவம்.***

***ஆயிரம் உண்டிங்கு ஜாதி-எனில்***
***அன்னியர் வந்து புகல் என்ன நீதி ?-***
ஓ *பாரதி நீயுமா*? சாதியம் பாடினாய்?

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-09-05-23

# சத்திய வேள்வி

---

ஓ யுக புருஷர்களே வாருங்கள்
ஒன்றிணைந்து யாப்போம் சத்திய வேள்வி ஒன்றை
அக இருள் ஒழிந்து-புது ஒளி பிறந்திட-
அன்பினால் ஒன்றிணைவோம்

ஒடுக்கப்பட்ட மனிதம் விடுதலைபெற
கொல்லப்பட்ட மானுடம் அமைதிபெற
நசுக்கப்பட்ட மனித உரிமைகள் துளிர்த்து எழு
இன மத மொழி சாதிப் பிரிவினை ஒழிந்து
மானுடம் ஒன்றுபட-வாருங்கள் யாப்போம்
புனித வேள்வி ஒன்றை

ஒன்றே குலம்-ஒருவனே தேவன்
ஒன்றே தேசம் என்று முழங்கி
பிரிவினைச் சுவர்களை மாய்த்து
ஒன்றுமைக்கு குரல் கொடுப்போம்.
நாம் எல்லோரும் இந்நாட்டு
மன்னர் என்றே விழாவெடுப்போம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-29.3.2023

# சாவகச்சேரி

---

யுத்தமேகங்களின் குருதி மழையில்
இன்றோர் ஒரு புது விதைப்பு,-நிலக்கண்ணிகளும்
மிதி வெடிகளும் நிறைந்த மண்ணில்
ஒரு கொடுந் தீ மிதிப்பு.

குண்டு மழையில் ஊர் நனைந்திட
குருதியாற்றில் உயிர்கள் சிதைந்திட
தீயும் கண்ணீரும் தீண்டிய சொந்தங்கள்
மாண்டவர்க்காய் அழுது மனம் தேறினார்
நாளை மரிப்பதற்காய்.

களைகளாய் முளைத்தெழுந்த முட் கம்பிக் கொடிகள்
காப்பரண்களைக் கடந்து படர்ந்திட, மண்ணுக்குள்
விழித்துக் கிடந்த நிலக்கண்ணிகள், தீராத இரத்த வேட்கையோடு
தீண்டிட காத்திருக்கும் உயிர் கொல்லிப் பாவைகள்

உயிர்ச் சுவடேயில்லாத மயான பூமியில் நாளும்
ஒரு அக்கினிப் பரீட்சை.
அழிவுகளும், அனர்த்தங்களும் நடத்தும்
அராஜக வேள்வியாலோ,
அகதிகளுக்கெல்லாம் நாளும் ஒரு ஞான தீட்சை

அழிவுச் சிலந்தி தன் ஆயுத வலையை ஊரைச்சுற்றிப் பின்னிட,-
அழுகிய பிணங்களில் ஆனந்தமாய் நெளியும் புழுக்களை கண்டு
ஒட்டிய வயிற்றோடு நத்தைபோல் ஊர்ந்து குண்டு வீச்சுக்கஞ்சி
அச்சத்தோடு எட்டிப் பார்த்து ஏக்கப் பெருமூச்சு விட்டது
பசியால் வாடிய ஓணான் ஒன்று.

மனம்மாறாத மனிதர் நடுவே உயிர் பிழைக்க
நிறம் மாறும் ஓணாண்களும் -யுத்தத்தால்
நிம்மதியிழந்து தவித்தன

தூாங்கிக் கிடந்த மிதிவெடிகளும்-விழித்தெழுந்து
தன்னைத் தீண்டிய உயிர்களையும் துண்டாடி மகிழ்ந்திட
-யுத்தத் தாங்கிகளும் கொதித்தெழுந்து ஊரைக் கொளுத்திட
ஆயுதப் போராட்டத்தின் விகாரத்தில் அங்கவீனச் சமூகம்

சாவு-தன் கச்சேரியை -சாவகச்சேரியில் அரங்கேற்ற,
பசியால் வாடிய ஆடு முட்கம்பிக் கொடிகளில்
பச்சிலையைத் தேடி-நாவை காயப்படுத்தியது.

ஊரொன்று தீக்குளித்து சுடுகாடாய்ப் போனதுமிங்கே,
உறவெல்லாம் பிணமென்றும், அங்கவீனரென்றும்,
அனாதையென்றும், அகதியென்றும் பெயர் சூடி
உருமாறிப் போனதுமிங்கே.

வீசும் தென்றலும் தன் வாசமிழந்தது
பிணவாடையினால்
வாசமலர்களும் வண்ணமிழந்தன
தீச்சுவாலைகளினால்.

பல்குழல் பீரங்கிகள் துப்பிய தீ கணைகளினால்
வானும் சூடாகி வசந்தமும் கோடையாக்கிட,
முல்லையும், நெய்தலும், மருதமும்
ஒன்றாய் பாலையாகின இங்கே.

அப்பாவிகளின் கிராமங்களோ அழிவுச்சக்திகளின்
ஆயுதப் பரிசோதனைக் கூடங்கள்.
அகதிமுகாம்களோ அங்கவீனச் சமூகத்தின்
கண்காட்சி அரங்குகள்

பெருமூச்சில் கொதிக்கும் கண்ணீர் ஆறுகள்
கடும் பசியால் தீயும் ஒட்டிய வயிறுகள்.
ஆயுதக் கலாச்சாரத்தில்-நாவிழந்து ஊமையான
மனித உரிமை, விழிகள்
பிடுங்கப்பட்டு குருடான நீதி தேவதை

பீரங்கிகளின் கொடுவாய்களிலோ பிணவாடை
துப்பாக்கிகளின் மூச்சு குழாய்களிலோ
உயிர் மூச்சை கொல்லும் தீச்சுவாலை

ஒட்டிய வயிறுகளுக்கு-உணவோ எட்டாத் தொலைவு
உருகும் விழிகளுக்கு-இருந்த உறவுகளும்
இன்றோ வெறுங்கனவு

பூக்களை அழித்து இறக்கைகளைப் பிடுங்கி
பட்டாம் பூச்சிகளை பட்டினி போட்டார்
கூடுகளைப் பிய்த்து குஞ்சுகளைக் கொன்று
தாய்க் குருவிகளைத் தவிக்க விட்டார்

இதயத்தில் விழித்த எரிமலைகளால்
கண்ணீரும் கொதிநீரானது
பெருமூச்சும் புயல் காற்றானது.

மழைக்கு முளைத்த குடைக்காளான்களும்
குண்டு வீச்சுக்கஞ்சி
விரித்த தம் வெண்குடையில்-இரத்தத்தால்
செஞ்சிலுவைகள் வரைந்தன
நத்தைகளும் கூடுகளைச் சுமந்தோடி
பதுங்கு குழிகளைத் தேடின:

நரிகளுக்கு வளைகளும்
ஆகாயத்து பறவைகளுக்கு கூடுகளுமிருக்க
ஈழத்தமிழனோ அகதியான அவலம்
அந்நிய தேசத்தில் புகலிடம் தேடிடும் துயரம்

இல்லிடம் எரிந்து போயிட கூகைகளும்
கோட்டான்களும்-இடிபாடுகளில் குடியிருக்க
பிணக்காடாய் மாறிய ஊரைப்பிடிக்க
பெரும் போர் இங்கே

எத்தனை ஊர்களை இங்கு நாமிழந்தோம்
அத்தனை ஊர்களும் பாழடைந்து கிடக்க
சுதந்திர காற்றிலும் பிணவாடை கலந்திருக்க
விடுதலை வேள்வியிலும் நரபலியின் நாற்றம்

இப்பலியைத் திருப்பலியென்று இறைவன் ஏற்பாரோ
ஈழத் தமிழர்களே-இதைச்
நம் தலை விதியென்று சொல்வீரோ?

இந்த மண்ணில் -நதிகளும் நாறின குருதியினால்
குயில்களும் கரைந்தன பிரிவுச் சோகத்தினால்
மழைகளும் ஓய்ந்தன கண்ணீரினால்
புயல்களும் அமைதியாயின பெருமூச்சினால்

இங்கே கிணறுகள் தோண்டினோம்
இரத்தம் வந்தது, கழனிகளை உழுதோம்
எலும்புக் கூடுகள் முளைத்தன
ஓடி விளையாடினோம்-அங்கம் ஊனமானது

வீடுகள் கட்டினோம்-தீக்கிரையானது
ஊர்கள் அமைத்தோம்-சுடுகாடானது
கோயில் கட்டினோம்-குண்டு வீச்சுக்காளானது
பள்ளிகள் அமைத்தோம்-இராணுவம் குடிவந்தது

மணமுடித்தோம்-விதவைகளானோம், பெயர்கள் சூட்டினோம்
-பயங்கரவாதி ஆனோம், ஈழத்தமிழன் வாழுமிடம் அகதிமுகாமோ?
எதிர்த்துப் புரட்சி செய்தால் போகுமிடம் சிதையோ-சிறையோ?

தீமையைச் சுட்டழிக்க கனல் ஏந்தித்
தாண்டவமாடும் உருத்திர மூர்த்தியானோம்
உருத்திரன் கழுத்தில் சர்பமாலை
ஈழத்தமிழன் கழுத்தில் சயனைட் மாலை
திரிசூலமாய்த் துப்பாக்கி

ஊரே சுடுகாடாகிட-உலவும் சிவனாய் நாங்கள்
சுந்தர பூமியை மீட்டெடுக்கும் வரை
எங்கள் நெற்றிக் கண்ணின் நெருப்பு அவியாது
விட மாலையின் விஷமும் குறையாது
நெஞ்சில் ஏற்றிய சுதந்திரத் தீயும் அணையாது

தெய்வங்களே ஆயதமேந்தின
தீயோன் மனம் மாறாததினால்,
தெய்வமே சிலுவையில் தன்னைப் பலியாக்கியது
பாவியையும் தேவமகனாக்கிட:

உடைமைச் சிதையில்-உயிர்கள் எரியும்
புதுமைச் சுடுகாடே-எங்கள் ஊர்
சிவமாய் நாங்கள—செத்தால்
சவமாய் நாங்கள்

சாவு தன் கச்சேரியை, சாவகச்சேரியில் அரங்கேற்றிட
**இன்று நாமிழந்தது ஊரல்ல**
**எங்கள் உயிர்.**

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-1-4-2023*

# சேவல்களும் மெழுகுவர்த்திகளும்

ஈழத்தமிழனின் விடியலுக்காய் கூவிய
வெள்ளைச் சேவல்களை-புரட்சிக் குரலென்று
வேட்டையாடிக் கொன்றார்

அடிமை இருளுக்குள் அல்லலுறும்
தமிழினத்திற்கு வெளிச்சம் தர
தம்மை எரித்த மெழுகுவர்த்திகளை
ஈழத்தமிழனுக்கு எதற்கடா வெளிச்சம்?
இருள்தான் என்றும் அவன் வாழ்வென்று-
மெழுகுவர்த்திகளின்
உயிர்ச்சுவாசத்தை ஊதி அணைத்தார்

***அன்பே சிவம்-வாழ்வே தவம்***
Pax Ravichandra-26.3.2023

# சிங்கக் கொடி

---

இரும்புக்கோல்களில் ஏறி நின்று ஆடி மகிழும்
சிங்கக்கொடிகள்-அனைத்துமிழந்து
ஆழம் காணாப் புதைகுழியில்
வாடித்தவிக்கும் தமிழ் அகதிகள்.

உச்சிக் கம்பத்தில் பறக்கும் சிங்களக் கொடியில்
சிங்கத்தின் வாயிலும், வாளிலும்
ஈழத்தமிழனின் இரத்தம்-கால்களிலோ
சிதையுண்ட தமிழ் தாயின் அவலச் சத்தம்

வேரின்றி உயரச் சென்ற நொண்டி கொடிகள்
காலூண்றி நின்றிட இரும்புக்கோல்கள்
சிறகுகள் இன்றிப் பறந்திட கயிறு
வெற்றிக் கொடியாய் மாறிட்ட களிப்பு

சீவர ஆடையை சிவப்பாக்கிய தமிழனின் இரத்தம்
போதிமரங்களுக்கு உரமான மனித எச்சம்
பிக்குகளின் யுத்த கோஷம் ஓதும் பிரித்தைப் பழித்திட
மனம் நொந்து கண்மூடி கல்லான புத்தர் பெருமான்
கண்களில் கசியும் ஈரம், மனிதம் குருடான அவலம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-31.3.2023

# சிறை

---

மூடிய சிறையினுள் முழுநேரம் வேதனை குடியிருக்கும்
விசாரணையின்றி நீதி- ஆயுட் கைதியாய்ச் சிறையிருக்கும்
உறவுகள் கண்ணீரில் தவமிருக்க
உடலும் உள்ளமும் வெறுமையில் உருக்குலையும்

கடிகாரமும் நாட்காட்டியும்-ஊனமுற்று அடையாளங்களாயிட
வளர்பிறையும் பௌர்ணமியும் வான் போடும் கோலங்களாயிட
சட்டமும் ஒழுங்கும் குருடாகி-ஊமையாகி
பேரினவாத தொழுநோயுற்றுத் துர்வாடை வீசும்

சிறைகம்பிகளும் -தமிழன் கண்ணீரால் துருப்பிடித்து
சோகத்தால் உருக்குலையும்
அறைச்சுவர்களும் குருதிக் கறைபடிந்து
சோகச் சித்திரங்களைக் காட்சிப் படுத்தும்

புன்னகை மறந்த முகங்கள்-கண்ணீரால் தினம் முகம் கழுவும்
காரிருள் பார்த்த விழிகள்-பௌர்ணமி வெளிச்சத்தில்
“கருணாமூர்த்தியை” காணத்தவிக்கும்

விரலே தூரிகையாக-குருதியே வண்ணமாக
சுவரெங்கும் கவிதையும், ஓவியமும்
சோகத்தின் அழியாத கோலங்களாகும்

நீதித் தீர்ப்பின்றி-நிரபராதிகளும் ஆயுள் கைதிகளாக
வாதிடத் திராணியின்றி, போராட வழியுமின்றி
அன்னையரும் மனைவியரும் அநாதைகளானார்

அராஜக அரசிடம் சிறையிருக்கும்
குருட்டு நீதி தேவதையின் நீதித் தராசும்
கள்ளத் தராசான அவலம்-உண்மையின்
சாட்சிகளும்  ஊமைகளான துயரம்

குருதிச் சித்திரங்களால் சிறைக்கூடங்களும் -
சித்திரவதைக் கூடங்களான கொடுமை
கண்ணீரில் கரையும் கற்புக்கரசிகளும்
வண்ணமிழந்த ஓவியங்களான வறுமை

காற்சிலம்பை விற்று நீதி கேட்டிட
ஈழ கண்ணகிகளுக்கு காலுமில்லை- சிலம்புமில்லை
கண்ணிவெடி கொடுத்த பரிசு
இயமனோடுபோராடி சத்தியவானை மீட்டிட
ஈழச் சாவித்திரிகளுக்கு கற்புமில்லை சொத்துமில்லை
சிங்கள இராணுவம் ஈந்த வெகுமதியின் கொடுமை

காரிருளைத் துலாவியே களைத்த விழிகள்
கண்ணீரில் நீந்திச் சிவக்கும்
ஓருயிராய் ஈருடலாய் வாழ்ந்த உறவை எண்ணி
காதல் இதயம் -நான்கு சுவர்களுக்குள் தவிக்கும்

அன்னையும் தந்தையும் ஊட்டி வளர்த்த தேகம்
தினமும் சித்திரவதைகளால் துன்புற்றுத் துடிக்கும்
இளமையும் அழகும் சிறைவாசத்திற்கு இரையாக
மூப்பும் பிணியம் முன்னால் வந்து வாழ்வைச் சிதைக்கும்.

குருதி வண்ணத்தால் சிறையும் சிவக்கும்
கண்ணீர் வெள்ளத்தால் நிலமும் கரையும்
சோக எண்ணங்களால் மனங்கள் கனக்கும்
அகாலமரணமோ சிறைவாசத்தை பழிக்கும்.

வதைபட்ட தேகம் வடியும் குருதியோடு
சிவப்புச் சித்திரமாகும்
புதையுண்ட சோகம்-விழிவழியே
கண்ணீர்ப் பூக்களாகும்

சிறையை அதிரவைக்கும் கதறல்கள்-அதர்மத்திற்கு அறைகூவலாகும்
அன்று அறைபட்ட இறைமகனே இன்று துன்புறும் ஈழத்தமிழனாக
எது நடந்ததோ அது நன்றாகவே நடந்தது கீதையாகும்

தட்டியும் திறவாத நீதியின் கதவுகளுக்கு
இரும்பு தாழ்ப்பாளாய் பயங்கரவாதத் தடைச் சட்டம்
யாருக்கும் கிடைக்காத பரிசாய்-ஈழத்தமிழனுக்கு
புலிப்பயங்கரவாதி என்ற கொடும்பட்டம்.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
*Pax Ravichandra-31.3.2023*

# சிறையும் சித்திரவதையும்

---



குருதிக் கறை படிந்த அறைகள்-வயிற்றை குமட்டி
வாந்தியை வரவழைக்கும் மலமூத்திர வாடைகள்
கதறல்களின் எதிரொலியால் காறை பெயர்ந்த சுவர்கள்
படை, படையாய்ப் பல்லி, கரப்பானின் குடியிருப்புகள்
காட்டில் கைதிகளின் சிறையிருப்புக்கள்

கண்ணீர் குருதி கலந்த கிறுக்கல்களாய்
கைதிகளின் கையொப்பங்கள்
சித்திர வதைக்கு சாட்சியங்களாய்-சுவரெங்கும்
குருதி வரைந்த குரூரச் சித்திரங்கள்



அங்கங்கள் நொருங்கிக் கழன்று நொந்த மேனி
ஏர் உழுத நிலமாய் மாறிச் செந்நீர் பூத்துச் சிவந்திட
மனிதத்தை வதைத்து சிதைத்து-கொன்று
சினம் தணித்த வன்முறை வாதிகள்

ருத்திர தாண்டவமாடி குருதியில் குளித்துக் களித்து
கொலைவெறி தணித்துக் களைத்த அரக்கர்கள்
கண்கள் பிதுங்கி, பார்வை அழிந்து, கபாலம் பிளந்திட,
தாயைக் கூவி அழைத்த கைதியின் கதறல்கள்
கண்ணீர் பெருக்கெடுக்கத் தப்பும் நினைவுகள்

வாய் திறந்து ஆற்றங் கரையில் ஓய்வெடுத்த முதலைகள்
ஆவலாய் ஓடிவந்து ஆவி போன உடல்களில் விருந்தாட
வானில் வட்ட மிட்ட கழுகுகள்-கூடி வந்து கொண்டாட
மனிதம் இரையானது, மானுடம் குருதி வெறி பிடித்த பேயானது





உருத்திரனும் அஞ்சி ஓடி ஒளிந்து மறைந்திட
மனிதம் கொன்று, மனிதம் தின்று- விடுதலை தேடும்
இரத்த வெறிபிடித்த போராட்டங்கள்-தமிழ் ஈழ
விடுதலை வரலாற்றின் இருண்ட பக்கங்கள்



ஓ என் நாடே! என் தாய் திருநாடே!

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-09-06.2023*

# சிவம்

---

காவிகளே நடமாடும் இனவாத எரிமலைகளாக,
இராணுவமோ தமிழரைக் வேட்டையாடும் யம தூதர்களாக,
குண்டுகள் வீழ்த்திய அப்பாவித் தமிழ் உடலங்களோ
காக்கைக்கும் கழுகுக்கும் , மீனுக்கும், நண்டுக்கும் விருந்தானது

நன்நீர் நிலைகளும் நாறி மணக்க
வெண் தாமரைப் பொய்கைகளும்-நச்சுப்
பொய்கைகளாய் மாறிக் கசக்க-எங்கும்
தமிழ்ப் பிணங்களின் ஊர்வலம்

சிங்கள் பத்திரிகைத் துறைக்கு
புதிய கேலிச்சித்திரமாய் ஈழத் தமிழினம்?
இராணுவம் வேட்டையாடிடும் -கொடிய
விலங்கினமாய் இளைய தமிழினம்?

சிங்கள இராணுவம் என்னைச்
சிநேகிதனாய்ப் பார்க்காவிட்டாலும்
மனிதனாய்க் காண இதயம் கொடு

கொடும் புலியாய் கண்டு பயங்கரவாதிப் பட்டம் சூட்டி
கொல்லும் நிலை நின்று என்னைக் காத்துவிடு
இறைவனைத் தினம் இறைஞ்சும் அப்பாவி மனம்

முகமூடியின் காட்டிக்கொடுப்பில் இன்று
இன்னோர் தமிழ் மகனின் மரண ஊர்வலம்
கட்டப் பொம்மனைக் காட்டிக் கொடுத்த
எட்டப்பன் இன்றும் தமிழினம்

மின்சார வேலிகளும், நிலக்கண்ணிகளும்
கண்ணயராமல் காவல் புரிந்திட
பேய்களும், பிணமுண்ணும் பூதங்களும் ஆளும்
கொடிய நரகத்தில் இன்று ஒரு புதுக் கைதி

காலமழிந்த இருளில்
வெறும் இலக்கமாய் உருமாறி
சித்திரவதையால் உருவழியும்
கசப்பான சூழலிங்கே

கதறலும், கண்ணீரும், குருதியும், மூத்திரமும் நாற
கசை, வசை, வாதையான சிலுவைப் பாதை
கல்வாரிச் சாவோ- ஒரு வழியில் மீட்பளிக்கும் கீதை

சித்திரவதையால் கேலிச்சித்திரமான உடலை
அர்தஜாமத்தில் வெட்டவெளியில் அம்மணமாக்கி
முட்டியில் சுட்டு முடமாக்கிப்-பின்
தீயால் சுட்டு தீமேயும் டயர்களுக்கு
தீனியாக்கிடும் வேளையில்
இராணுவத்தை மன்னிக்க வேண்டி
சுடும் நெருப்பிலும் சுயநினைவு மறையுமுன்
மனதுக்குள் வேண்டியது
தன்னையறிந்த சுத்த பிரம்மம்.

இருள் சூழந்த இரவில்- எல்லாம் முடிந்திட
இரவும் பகலுமில்லாப் பெருவெளியில் காலமுமழிய
எஞ்சியது சிவமோ ? சாம்பலோ ?

உறவுகளே விழிநீர் துடையுங்கள்
சிவம் வீடு திரும்புகின்றது
கனவுகளே வண்ணம் பூசுங்கள்
காயம்தான் சாம்பலானது.
ஆத்மா அழிவற்றது

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-1-4-2023

# சோலைப் புஷ்பம்

---

மங்கலம் குலைந்து மலரணி உதிர, மாங்கல்யம் அறுந்து-
மணவாழ்வு மணமிழந்து வாட, மையெழுதிய விழிகளில்
கங்கைகள் ஓட, வண்ண வளையல்களும் நொருங்கி-அன்ன
நடையோடு இசைபாடிய, வெள்ளிக் கொலுசுகளும் விம்மினவே

செந்தணலில் வீழ்ந்த புழுவாய் நெஞ்சும் துடிக்க
சோகத்தில் வெந்து சொந்தங்களும் தவிக்க
வயிற்றில் வளரும் சிசுவுக்கு வரும் நாளில் தந்தை
மாலை சூடிய உருவப்படமானான்
தாயோ வெண்ணாடை சூடி விதவையானாள்

மங்கலம் முழங்க மாலை சூடி
மணமகள் கைத்தலம் பற்றியவன்-விடமாலை சூடி
வேங்கையாய்ப் போராடி வீழ்ந்தவன்
தாலி சூடியவளுக்கு-கலைந்த கனவானான்

புன்னகை வனமும் பூவிழந்து வாட, பூங்குயில் தோப்பும்
சோகத்தால் புலம்ப, கண்ணகி புரத்தில்-கோவலனுக்காய்
மாரடித்துப் புலம்பும் மங்கை, ஜானகி புரத்தில்-
சீதைக்காய், துக்கம் அனுஷ்டிக்கும் தந்தை.

யுத்தம் முடிந்து பத்தாண்டுகள் கழிந்தும்
காணமற்போனவர்களுக்காய் தவமிருக்கும் தாய்க்குலம்
வறுமைத் தீயில் வெந்து, கண்ணீர் மழையில் நனையும்
உறவுகளின் சோகம்-மனதை வருத்த வாடும் தமிழ் ஈழம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-4-7-2023

# சோதனைச் சாவடி

---

இராணுவச் சிலந்தியின் கொடுவலை-சோதனைச் சாவடிகளாய்
காப்பரணகளாய் ஊர்களைச்சுற்றி பின்னி கிடக்க
விஷச் சிலந்திகளாய் இராணுவம் உஷார் நிலையிலிருக்க
கொடுக்குகளாய் ஏந்திய துப்பாக்கிகள்
கொத்தவோ குண்டு பொழியவோ என அங்கலாய்த்திருக்க,
சோதனைச் சாவடியில் -மானுடத்தை வடிகட்டி
கட்டபொம்மனை தேடும் எட்டப்ப முகமூடிகள்

கொடுவெயிலில் காய்ந்து கடும் மழையில் தோய்ந்து
நித்தம் நடக்கும் வேதனையான சோதனை நாடகத்தில்
அச்சம் தொண்டையை அடைக்க அடையாள அட்டைதாங்கி
சோதனைச்சாவடி நோக்கி சோர்ந்து ஆமையாய் நகர்ந்தது
புதிய வடிகட்டலுக்காய்-ஈழத்தமிழினம்

## தமிழ்

சொல்லுறுதியும் தோள்வலியும் நிறைந்த காதலனைச்-சுட்டெரித்து
மெல்லிடையில் மேகலையணிந்தவளை வல்லாங்கு செய்து
சுற்றத்தையும் சொந்தத்தையும் கண்ணீரில் மூழ்கடித்து
இராணுவம் பூரித்திட-பெருமழையாய்
இடியோடு வானும் வாய்விட்டழுதது

பூச் சூடிய பெண்மை தீச் சூடிப் பூக்க
இங்கே தென்றலும் தீய்ந்து மணந்தது
பூந்தேகம் எரிந்ததினால்,
கண்ணீரும் செந்நிறமானது
காதலும் வீரமும் ஒன்று கலந்ததினால்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-29.3.2023

# பாதை மாறிய பயணங்கள்

முகுந்தன் நன்றாகக் களைத்திருந்தான்..உடல் முழுவதும் வியர்வையால் நனைந்திருந்தது. கல்லும்,முள்ளும் அவனுடலைக் கீறி கிழித்து காயப்படுத்தியிருந்தன.அவனுக்கு மூச்சு வாங்கியது. வயிறு பசித்து உணவுக்காய் ஏங்கியது. அவன் திரும்பிப் பார்த்தான்.அடிவானம்வரை ஊடுருவிய அவன் விழகளில் ஏக்கம், கவலை எல்லாம் ஒன்றாய் பளிச்சிட்டன.காடுகளுக்கும்,வயல்களுக்கும் அப்பால் வெகுதொலைவில் கரும்புகை வானை நோக்கி எழுவது தெரிந்தது. தமிழர் உயிர்களும், உடமைகளும் சுதந்திர வேள்வியில் ஆகுதியாய் பலியாகிக் கொண்டிருந்தன.

அவன் விழிகளில் ஈரம் கசிந்தது. “அம்மா” என உரத்து கத்தினான்.மிக சன்னமாக “அம்மா” “அம்மா” என மலைகள் அவன் குரலை எதிரொலித்தன.எங்கோ தொலைவில் துப்பாக்கி வேட்டுக்கள் தொடர்ந்து ஒலிப்பது கேட்டது.ஆயுதப்போராட்டங்கள் நியாயப்படுத்தப்பட்ட நேரம்.அடக்குமுறையின் வடிவங்கள் அராஜகமாய் உருமாறிய கொடுமைகள் உலகெங்கும்.

“*ஒரு இனத்தின் போராளி-எதிர் இனத்தின் பயங்கரவாதி*”

என விமர்சனம் எதிரொலிக்க அப்பாவிகளின் உயிர்களும், உடமைகளும் பெறுமதியற்று செல்லாக்காசான அவலங்கள் எங்கும்.

அவன் ஓடினான்.துப்பாக்கி வேட்டுக்கள் அண்மிக்க அச்சம் அவனை விரட்டியது.அவன் திரும்பிப் பார்க்காது ஓடினான்.கால்கள் கெஞ்சின.தொலைவில் வெளிச்சம் தெரிந்தது.அவன் தள்ளாடி, தள்ளாடி ஒளியை நோக்கி நடந்தான்.இடிந்து கிடந்த பிள்ளையார் கோவில் அது.பிள்ளையார் மௌனமாய் அமர்ந்திருந்தார்.யாரோ ஏற்றி வைத்த எண்ணெய் விளக்கு சன்னமாய் எரிந்து கொண்டிருந்தது.மனித நம்பிக்கையின் உயிர்த்துடிப்பு இன்னமும் வற்றாத நிலைக்கு சான்றாய் அதன் சுடர் காற்றில் ஆடி அணைவதா எரிவதா என போராடிக் கொண்டிருந்தது.அவன் சரிந்து மண்டபத்தில் தன்னை சாய்த்துக் கொண்டான்.பின் களைப்பினால் மெல்ல தன்னையறியாமல் உறங்கிப்போனான்.

ஒரு நாள் திடீரென அவனுடைய கிராமத்தை இராணுவம் சுற்றிவளைத்தது. பட..பட.. என எங்கும் துப்பாக்கி வேட்டுக்கள் ஒலிக்கத் தொடங்கின.தொலைவில் வயலுக்கு நீர பாய்ச்சிக் கொண்டிருந்த அவன் மனம் அச்சத்தால் நடுங்கியது.மண்வெட்டியை எறிந்து விட்டு ஒரே பாய்ச்சலாய் வீட்டை நோக்கி ஓடினான்.பல குடில்கள் தீக்கிரையாகிக் கொண்டிருந்தன.அவன் குடிசையை தீ மெல்ல பற்றத் தொடங்கியிருந்தது.அம்மா குருதி வடிய தரையில் வீழ்ந்து கிடந்தாள்.”அம்மா” அடிவயிற்றிலிருந்து எழுந்த குரல் குடிசையை ஆட்டங்காண வைத்தது.

“ஓடு மகனே ஓடு”, மகனே நிற்காதடா, ஓடுடா ஓடு” தாய் முனகினாள்.தாயை நெஞ்சோடு வாரியணைத்தவன் முகத்தோடு முகம் சேர்த்து அணைத்து அழுதான்.அவன் உடல் முழுவதும் தாயின் இரத்தத்தால் நனைந்தது.வெளியில் ஒரே அழுகுரல்.பலத்த வெடிச்சத்தங்கள் தொடர்ந்திட,கைக்குண்டொன்று வெடிக்கும் சத்தம் குடிசையை அதிரவைத்தது.குடிசையின் ஒரு மூலையில் தீ திடீரென தாவியது.தாயின் குரல் ஓய்ந்து, உயிர் போய்விட்டிருந்தது.அவள் கரமோ வெளி வாசலை நோக்கி விரிந்து கிடந்தது.
அம்புலி காட்டி அமுதூட்டிய அன்னையர் செல்வங்கள் வெம்புலிகளாய் மாறிய நேரம் அது.திடீரென குடிசையின் மேற்பகுதி தீயோடு சரிந்து கீழே வீழ்ந்தது.”அம்மா” என உரத்து

கதறினான்.அவனுக்கு விழிப்பு வந்தபோது உடல் வியர்வையால் தெப்பமாய் நனைந்திருந்தது.சுற்றிலும் மெல்ல இருள் கவிழத்தொடங்கியது.
“என்ன பயங்கரக்கனவு கண்டீர்களா? இருளில், ஒரு மூலையில் இருந்து யாரோ கேட்டார்கள்.மங்கிய ஒளியில் ஒரு இளைஞன் உட்கார்ந்திருப்பது தெரிந்தது.அவனுக்கு சற்று அச்சமாய் இருந்தது.
“இந்த பழங்களை சாப்பீடுங்கள்.சற்று தெம்பாவது கிடைக்கும்.பகலெல்லாம் பட்டினி கிடந்தால் சோகம் தீராது.வெறும் வயிற்றோடு உறங்கினால் வீணாண கனவுகள் வரும்.”..அவன் முடிக்குமுன் இவன் வேகமாய் “வேண்டாம்” என்றான்.

“சோகங்களுக்கும்,இழப்புகளுக்கும் உண்ணா விரதமிருந்து விடுவதால் தீர்வு கிடைத்து விடாது.கவலைப்படுவதை விட நம்பிக்கையை வளர்த்தல் அர்த்தமுள்ளது.நம்பிக்கையில்லாத வாழ்க்கை நம்மை நாசமாக்கிவிடும்..சினேக பூர்வமாய் கூறிக்கொண்டே தன் உடலை அரக்கி பழங்களை அவன் நீட்டினான்.அப்போதுதான் இவன் அவனுடைய கால்களை நோக்கினான்.காலிலிருந்து குருதி கசிந்து கொண்டிருந்தது.இவன் பதறிப்போனான்.

“சாப்பிடுங்கள் உணவு தெம்பைத் தரும்.”இவன் சாப்பிட அவன் தன் காயத்திற்கு கட்டுப்போட முனைந்தான்.’நீஙகள் யார்?”இவன் கேட்டான்.எனை ஈன்றவர் இட்ட பெயரும்,என் இனத்தின் பெயரும் மறைந்து போயிட எமை அடக்கி ஆள்பவர் இட்ட பெயர் “பயங்கரவாதி” அவன் கூறிச் சிரித்தான்.

தீடீரென அவன் மெல்ல பாடத்தொடங்கினான்.

“*என்று தணியுமிந்த சுதந்திர தாகம்*’’

.பாரதியின ஆவேசம் உககிரமய் எழுந்து அழுகையோடு முடிந்தது.இப்படியும் ஒரு இரகத்தில் பாடமுடியுமா என அதிசயித்தான்.இவனுக்கு தூக்கம், துயரத்தை தாண்டி ஆட்கொண்டபோது,அவன் சொன்னான் தூங்குங்கள் என்று.இவன் மெல்ல உறங்கிப்போனான்.

தீடிரென தட..தட..என்று பலர் ஓடுவது கேட்டது.இவன் விழித்தபோது அவனைக் காணவில்லை.கீழே ஒரு காகிதத் துண்டு கிடந்தது.அவன் எடுத்து எதையோ நினைத்தவாறு கிழிந்துபொன தன் ஷேர்ட் கொலரினுள் பத்திரப்படுத்தினான்.வெளிச்சம் கோயிலை ஊடுருவும் நேரம்.ஏதோ ஒன்று திடீரென இவன் தலையை பலமாக தாக்கிற்று.அவன் நினைவுகள் எங்கோ சிதறி எதற்குள் மூழ்கிப்போயின.

அவர்கள் இவனை கைதுசெய்திருந்தார்கள்.இவனுக்கு நினைவு திரும்பியபோது தலை பலமாக கனத்தது.நிமிர்ந்து சுவரோடு சாய்ந்து உட்கார்ந்தான்.அறையினுள் மெல்லியதாக 20 வால்ற் பல்ப் எரிந்து கொண்டிருந்தது.சுவரெல்லாம் இரத்தக்கறைகள்.சிறு நீர் நாற்றம் வயிற்றை குமட்டியது.தரையில் இங்கும் அங்குமாக வைக்கோல் பரவிக் கிடந்தது.வாய் கசந்திட மெல்ல துப்பினான்.இரத்தம் கொட்டியது.யாரோ நடந்து வரும் ஓசை கேட்டது.கதவு கிறீச்சிட்டு திறக்க பயம் அடிவயிற்றை கவ்வியது.ஒரு இரானுவ வீரன் அவனை வரும்படி சைகை காட்டினான். அவனுக்கு அடிவயிற்றில் அமிலம் சுரந்தது.நீண்ட தாழ்வாரத்தினூடாக அவனை அழைத்துப்போனான் இரானுவ வீரன்.இரு பக்கங்களிலும் அம்புலி பார்த்து அமுதுண்ட தமிழ் சந்ததி தேய்பிறையாய் உருவழிந்து கொண்டிருந்தது.அறையொன்றின் கதவு திறந்து பின் மூடிக்கொண்டது.அதிகாரி ஒருவன் மேசையிலிருந்த காகிதங்களைப் பார்வையிட்டுக் கொண்டிருந்தான்.

இவனைக் கண்டதும் அவன் முகத்தில் சிறு சலனம் தோன்றி பின் மறைந்தது.
'உன் பெயர் என்ன? எங்கே உன் அடையாள அட்டை?' கொச்சைத் தமிழிலில் கேட்டான்.அடையாள அட்டை வீட்டில் தீக்கிரையாகிப்போய்விட்டது.
'என் பெயர் முகுந்தன'.ஐயா எனக்கு எதுவும் தெரியாது.நான் விவசாயி.கெஞ்சினான் முகுந்தன்.

டேய் ஏன் பொய் சொல்கிறாய்.உன் பெயர் திருக்குமரன்.இராணுவத்தினர் பலரின் சாவுக்கு உன் நிலக்கண்ணிகள்தான் காரணம்.மெல்ல உறுமினான் அந்த அதிகாரி.முகுந்தனுக்கு தலை சுற்றியது. இங்கு எல்லா தமிழ் இளைஞர்களும் இதே பல்லவியைத்தான் பாடுகிறார்கள்இந்த அறைக்கும், இதன் சுவர்களுக்கும் இவற்றைக் கேட்டு கேட்டு அலுத்துப்போய்விட்டது.

ஐயா நானில்லை நீங்க தேடுகிறவன்.நான் அப்பாவி-கதறி கெஞ்சினான் முகுந்தன்.
கழற்று உடுப்பை கத்தினான் அதிகாரி.முழு நிர்வாணமாய் நின்ற அவனை திடீரென எல்லாப் பகுதிகளிலிருந்தும் பொல்லுகளாலும், வயர்களாலும் அடித்தார்கள்.அவன் அலறலில் எங்கோ இருந்த புறாக்கள் பட.பட.என சிறகடித்துப் பயத்தால் பறந்தன.

சொல்லுடா எங்கே உன் கூட்டாளிமார்?

இவன் கதறக் கதற அடி வலுத்தது.தோல் கிழிந்து உடல் முழுவதும் இரத்தம் கசிய இவன் மெல்ல மயங்கிப்போனான்.அவனுடைய இரண்டு கைகளை பின்புறமாக கட்டி, கால்களை நைலோன் கயிறுகளால் பிணைத்து கூரையின் உத்தரத்தில் தொங்கவிட்டவர்கள், மயக்கம் தெளிய தண்ணீரை முகத்தில் அடித்து தெளியவைத்து, பின் குதிகால் முதல் ஆணுருப்புவரை பொல்லுகளால் மிருகத்தனமாக தாக்கினார்கள்.அக்கின அவன் கால்களுக்கிடையே பற்றி அடிவயிற்றை தீய்த்தது.அவன் மீண்டும் நினைவிழந்தான்.

அவனுக்கு சுயநினைவு வந்தபோது யாரோ அவனை உற்று நோக்குவது தெரிந்தது.அடர்ந்த தாடிகளுக்கிடையில் உதடுகள் பிரிந்து வயதான உருவம் ஒன்று ஏதொ சொல்லிற்று.அவன் உடல் முழுவதும் சொல்ல முடியாத வலி.நா வரண்டு தண்ணீர் கேட்டது.முக்கி,முனகி இவன் தண்ணீர், தண்ணீர் என்றான்.

அந்த தாடிக்கார முதியவர் வாசலை நோக்கி ஐயா தண்ணீர் கேட்கிறான்.கொஞ்சம் தாங்க என கெஞ்சினார்

போடா-போ ஒரு இராணுவவீரன் விரட்டினான் அந்த முதியவரை
ஐயா சற்று இரக்கம் வையுங்கள் மீண்டும் கெஞசினான் தாடிக்காரர்
இந்தாடா தண்ணீா என்று அழைத்த ஒருவன் கம்பிக்கதவுகளுக்கூடாக தாடிளைப் பிடித்து கிழவரின் தலையை இரும்புக் கதவோடு பலமாக மோதினான்.முதியவருக்கு பொறி கலங்கியது. வெளியே சிப்பாய்கள் பலமாக சிரித்தார்கள்.

பெரியவர் வேதனையோடு திரும்பிவந்து அவனருகே மண்டியிட்டு அமர்ந்தார்.பின் குனிந்து அவனைப் பார்த்தார்.அவர் நெற்றியிலிருந்து வடிந்த இரத்ததுளிகள் முகுந்தனின் வாய்குள் விழுந்தன.கிழவர் பதற்றத்தோடு தன்னுடைய நெற்றியை கைகளால் பொத்திக்கொண்டு அவனுடைய உதட்டைத் துடைக்க முயன்றார்.முகுந்தன் மீண்டும் நினைவிழந்திருந்தான்.

மின் விளக்குகள் மெல்லப் பூத்தன.திடீரென யாரோ கதவைத் தட்டினார்கள்.கிழவர் எழுந்து போனார். தகரக்கோப்பை ஒன்றில் சிறிது தண்ணீரை ஒரு சிப்பாய் நீட்டினான்.தண்ணீர்

கிழவனுக்கு மகிழ்ச்சியாயிருந்தது.கிழவா அவனை யாரென்று விசாரி. என்ன உறுமினான் இரானுவவீரன்.முதியவர் தலையை பலமாக ஆட்டினார்.

முகுந்தனுடைய முகத்தில் குளிர்ந்த நீர் பட்டதும் மெல்லக் கண் திறந்தான்.வாய் அம்மா என முனகியது.கிழவர் நீரை கொஞ்சம் கொஞ்சமாக அவனுக்கு பருக்கினார்.தாத்தா,தாத்தா என அவன் முனகினான்.கிழவர் வாஞ்சையேபடு அவன் தலையை தடவிக்கொடுத்தார்.கிழவன் அவனுடைய சட்டையால் மெல்ல விசிறினார்.கிழிந்த அவன் சட்டையிலிருந்து காகிததுண்டு ஒன்று கீழே விழுந்தது.கிழவன் மெல்ல அதனை எடுத்துக்கொண்டணன்.பின் கதவோரம் நகர்ந்து படிக்கத்தொடங்கினான்.

*'ஈழக்கனவினை என் ஈரக் கருவிழிகள்*
*களிப்புற காணமுன்-*
*மூடித்துயருறுமோ? -உடல்தான்*
*மூச்சடங்கி,பேச்சடங்கி -பிணமாய்*
*வாடித்துயருறுமோ? '*

பெரியவர் வியப்போடு அவனை நோக்கினார்.பின் வாய்விட்டு உரக்கப் பாடினார்.முகந்தன் மெல்ல முறுவலித்தான்.பின் உறங்கிப்போனான்.

எந்த புரட்சிக் கவிஞனுக்காக விரித்த வலையில் இந்த அப்பாவி புள்ளிமான் சிக்கிக்கொண்டதை அறியாத இரானுவம் அன்று குதுாகலித்துக் கொண்டாடியது. மறுநாள், வானொலி, தொலைக்காட்சிகளில் புரட்சிக் கவிஞன் திருக்குமரன் சுட்டுக் கொலை என செய்திகள் ஒலிபரப்பப்பட்டன.

புள்ளிக்குயிலோ காடுகளுக்கூடாக, காயம்பட்ட காலோடு ஒளியைத் தேடிப் நடந்திட,அப்பாவி பசுங்கன்றோ எரியும் டயர்களில் புகையாய் கலந்து வானில் எழுந்து கொண்டிருந்தது.

.

*உண்டு குடித்து உறங்கி எழுகின்றோம் மானிடரே*
*ஒவ்வொரு நாளும்-இறப்பதற்காய்*
*மண்ணோ,தீயோ எமை உண்பதற்காய்-இங்கு*
*செத்தவர்க்கும், பேடிகளுக்கும் தேவை*
*ஆறடி நிலமும் ,அடிமை வாழ்வும்-சுதந்திர*
*பித்தர்க்கோ தேவை சுதந்திரமும்,*
*உரிமை வாழ்வும்-அறிவீரே-*
*விழித்து எழுவீரே.'*

# சுதந்திரச் சிந்தனைகள்



எழுத்தாணிகளும், துப்பாக்கிகளும்
ஏந்திப் போராடினாலன்றி-ஈழத்தமிழர்
எமக்கு சுதந்திரமில்லை

உயிர் தமிழுக்கும், உடல் மண்ணிற்கும் என்று
விடுதலை வேள்வி யாத்தாலன்றி-தாயக
விடுதலைக்கு வழியில்லை



இருந்தும் அகிம்சா மந்திரம் முழங்கி
எல்லோரும் ஒற்றுமையாய் வாழ
"***அமைதியின் வேள்வியை***" நாம் யாப்போம
***ஒற்றுமையின் கீதத்தை*** ஒன்றாய் இசைப்போம்

எல்லோருக்கும் எல்லாம் என்றே-சமதர்ம
சமத்துவ சமுதாயம் படைப்போம்
இன, மொழி, மதம் கடந்து-எல்லோரும்
இந்நாட்டு மன்னரென்போம்
ஈழம் எம் தாயகம் என முழங்குவோம்

சுற்றிச் சுழன்றிடும் எம் இராட்டைகள்
சுதந்திர காற்றை வீசட்டும்
சுவை சொட்ட நாம் காய்ச்சிடும் உப்பு
நம் இறைமையின் இனிமை சொல்லட்டும்

நம் உண்ணா நோன்பு தவமாகி
எம் சுதந்திர தாகத்தை பறைசாற்றட்டும்
நாம் ஓதும் ஒத்துழையாமை மந்திரம்
எம் தாயகத்தின் தேசிய கீதமாய் ஒலிக்கட்டும்

தர்ம யுத்தம் கர்ம யோகமாகட்டும்
சத்திய வேள்ளியில் சமத்துவம் வரமாகட்டும்
பிரிவினை மாய- ஒற்றுமை ஓங்க
தர்மம் எமை ஆளட்டும்

அன்பும், உண்மையும், சமத்துவமும்
எங்கும் நிலவிட- சகோதரர் நாம் என்ற
ஆனந்தப் பள்ளு எங்கும் ஒலிக்கட்டும்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra*

# சுமைகள்

---

எங்கள் வாழ்வில்-இன்றும் போகாத வண்ணக் கறைகள்
சிந்திய குருதி சிவப்பாக-விடியாத வாழ்வில் கலையாத இருள்
கறுப்பாக, கலைந்த -தமிழ் ஈழக் கனவுகள்.

குருதி சிந்தி, கண்ணீர் பெருகிட உறவும், உடமையும் அழிந்து,
அகதியான மானுடம் அல்லாட- வாழ்ந்த மண் சிவந்ததென்ன?
எம் வாழ்வும் இருளில் சிறைப்பட்டதென்ன?
இன மத வேற்றுமையின்றி விதவைக் கோலத்தில் பெண்மை
கண்ணீர் கோலத்தில் தாய்மை-யுத்தம் உருவழித்த கொடுமை

அடிமைகளான உரிமைக் குடிமக்கள்
ஆயுதவாதிகள் தோள்களிலோ அச்சுறுத்தும் ஆயுதங்கள்-
கரங்களில் கைகுண்டு விழிகளிலே கேலி-முகம் மறைத்த தாடி

அராஜக ஆயுதவாதம் அரியணை அமர
கூட்டமாய் வந்து இந்நாட்டு மன்னர் நாம் என்றார்
சட்டமும் நீதியும் நாம்தான்- உங்கள்
வாழ்வும், சாவும் எம் கரங்களில் என்றார்

கொலையும், கொள்ளையும், கப்பமும் மலிந்து
மனித வாழ்வு நடைப்பிணமாய்ச் சீரழிய
கொல் அல்லது கொல்லப்படுவாய் நீதியானது
பழிக்குப் பழி இயக்க மோதல்களானது

திசைமாறிய போராட்த்தில்-ஏகாதிபத்திய கைகூலிகளாய்,
ஒட்டுக்குழுக்களாய் உருமாறிய போராளிகள்
விடுதலைப் பயணம் பயங்கரவாதமாய் திசைமாறிட
காவல் தெய்வங்களே இரத்தக் காட்டேறிகளான அவலம்

கலைந்த விடுதலைக் கனவில் நிலை மாறிய நட்சத்திரங்கள்
திசைமாறிய விடுதலைப் பயணத்தின் பாதையெங்கும் இரத்தம்-கூட
அகதி, விதவை, அநாதைகளின் ஓயாத அழுகைச் சத்தம்.
அரசியல்வாதிகளின் மாறாத இனவாதம்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-09-06.2023

# சுதந்திரப் பொன்விழா

---

வெள்ளையரின் முடிவில்லாக் கறுப்பு இரவுகளுக்கு
விடியல் சொன்ன -உதய நட்சத்திரம்-நம் சுதந்திரம்
மூவினமும் ஒன்றிணைந்து யாத்த சுதந்திர வேள்வியிது
ஒருதாய் மக்கள் என்ற உண்மையின் -வெளிப்பாடிது

இன்றோ ஓயாத பகையினால் தீராத யுத்தம்
ஒரு தாய் மக்களே விரோதிகளான பங்கம்
விழிக்கும் நிலக்கண்ணிகளால் தினமும் நிலநடுக்கம்
விமானக் குண்டு வீச்சில் எரிமலையின் முழக்கம்

ஒற்றுமையின் வேர்களைப் பிரிவினைப் புழுக்கள்-அரித்திட
சுபீட்சத்தின் குருத்தை யுத்த வண்டுகள் -கொறித்திட
வானமெங்கும் கொடிய யுத்த மேகங்கள்
தேசமெங்கும் வற்றாத கண்ணீர், குருதி ஆறுகள்

இறக்கைகள் இருந்தும் பறந்திட வழியில்லை
வானமெங்கும்-ஏவுகணைகள்
கால்கள் இருந்தும் நடந்திட வழியில்லை
பாதையெங்கும்-நிலக்கண்ணிகள்
அலையாடும் நீலக் கடலிலோ
அச்சுறுத்தும் கடற்கண்ணிகள்

வெண்புறாக்களைப் பறக்கவிட்டு
வெள்ளைத் தாமரைகளை நட்டோம்
சாந்தி இல்லை சமாதானம் இல்லை

இருண்ட வானில் ஒளியேற்றத் தீபங்கள் இல்லை
ஒற்றமையை நிலை நாட்ட தேசப்பிரியர்கள் இல்லை
புத்தரும், தம்மமும் வாடிட-சங்கமோ
பேரினவாதத்தால் நாறிட-பிளவுண்ட இனங்கள்

சுதந்திரப் பொன் விழாவில் சூளுரைப்போம்
உரிமைகளைப் பகிர்ந்து ஒற்றுமையைக் காப்போம்
யுத்தத்தை ஒழித்து சுபீட்சத்தை வளர்ப்போம்

இன, மத, மொழி பேதங்கள்- இனியில்லை
ஒன்றே தேசம்-ஒன்றே மக்கள்
ஒன்றே நீதி -ஒற்றுமையே நம் மாட்சி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
*Pax Ravichandra-1-4-2023*

# சுதந்திரக் கனவுகள்

---

ஒற்றுமையும், உறுதியும் வென்றெடுத்த சுதந்திரம்
சிங்களமும், செந்தமிழும் உச்சரித்த தாரக மந்திரம்
கற்றவரும், மற்றவரும் காதல் கொண்ட சாத்திரம்-இனி
அடிமையில்லை உரிமைக் குடிமக்கள் என்ற நம் சரித்திரம்

எல்லோரும் இந்நாட்டின் மன்னரான நன்நாள்
எந்நாளும் எம்மை நாமாள மலர்ந்திட்ட பெருநாள்
வல்லோரும், எளியோரும் வாழ்த்திய திருநாள்
அந்நிய ஆதிக்கம் முடிவுற்ற சுதந்திரப் பொன்னாள்

ஒற்றுமையும், சமத்துவமும் மலர்ந்திடல் வேண்டும்-நாம்
எல்லோரும் ஒரு தாய் மக்கள் என்றே முழங்கிடல் வேண்டும்
வேற்றுமையும், பிரிவினையும் ஒழிந்திடல் வேண்டும்-இங்கு
எல்லோருக்கும் எல்லாமும் கிடைத்திட வேண்டும்

மொழியும், மதமும் மக்களை இணைத்திடல் வேண்டும்
சட்டமும், நீதியும் இனங்களைக் காத்திடல் வேண்டும்
உழைப்பும், ஒற்றுமையும் எம்மை உயர்த்திடல் வேண்டும்-நாளும்
இலங்கையர் நாம் என்ற முழக்கம் கேட்டிடல் வேண்டும்

வீசிடும் காற்றில் கருகும் பிணவாடை நாறிட
காற்றோடு போனது எம் கனவு
விழிகளிலே வற்றாத கண்ணீர் ஓடை பொங்கிட
விம்மியழும் இதயத்திலே நிலைத்த துயரத்தின் வாடை

கோர யுத்தம் முடிவின்றி தொடர்ந்திட
கொடிய வாட்கள் இதயங்களை துளைத்திட
எரியும் டயர்களில் கருகிடும் உறவுகள்
கலங்கி நிற்கும் உணர்வுகள்

வன்முறையின் பாதையெங்கும் இரத்தகறைகள்
பாழிடங்களாய் மாறிடும் குடியிருப்புகள்
கலையும் மேகங்களாய் சுதந்திரகனவு
கயிறறுந்த காற்றாடியாய் அகதிகளின் வாழ்வு

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-13-04-2023

# சுதந்திரக் காற்று

நூற்றாண்டுகளாக
உயிரால், மெய்யால், உயிர்மெய்யால்,
ஆயுத எழுத்தால் எழுதி முடியாத
தமிழ் ஈழக் காவியம்
என்றுதான் முற்றுபெறுமோ?
எம் உயிரும் என்றுதான்
சுதந்திரக் காற்றைச் சுவாசிக்குமோ?

விடியல் என்பது-
உன் விழிப்பிலேயன்றி
-சூரிய உதயத்தில் அல்ல
தமிழா !விழித்தெழு!
தமிழா! விழித்தெழு!

***அன்பே சிவம்- வாழ்வே தவம்***
Pax Ravichandra-4-4-2023

# சுதந்திரம்

---

எல்லை தாண்டாமலிருக்க-எச்சரிக்கையாய்
காட்டு யானைகளுக்கு மின்சாரவேலிகள
· தலதா "ராஜாக்களுக்கோ"
பெரஹரா பவனியிலும் கால் விலங்கும்
கையில் அங்குசத்தோடு பக்கத்தில் பாகன்

அப்பாவிகளோ "புலிப்" பட்டங்களோடு
விசாரணையில்லா கைதிகளாய்-சிறைகளில்
ஆண்டுகள் பல வாடிக்கிடக்க
பயங்கரவாதச் தடைச்சட்டம்

"அம்மான்" "பிள்ளையான்" "KP" பயங்கரவாதிகளோ
அமைச்சர்களாய், ஆலோசகர்களாய், உல்லாசமாய்
வாழ்வைக் களிக்க, அரசியலோ விபச்சாரம்-தமிழ்
"தர்மம்" "நீதி' "ஒழுக்கம்" அநாகரீகம்?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-4-03-2023

# தமிழ்த் தேசியம்

ஆதரவாளர் சிலரோடு-கரம் கூப்பிக் கும்பிட்டு
வாக்கு கேட்டு வீடு வந்த வேட்பாளர் பிரசுரத்தில்
ஆணவத்தைப் பறைசாற்றும் சாதனைகள்,
கேள்விக் குறியான பட்டப் படிப்புகள்?

அபிவிருத்திக்கோ, தமிழ் தேசியத்துக்கோ திட்டங்கள் இல்லை
தமிழனைத் தமிழன் ஆள வாக்களித்து அதிகாரம் தாருங்கள்
அஞ்சோம், அடிபணியோம், வருங்காலம் நமதே-நவரச
நடிப்பிற்கும் தமிழ் கோஷங்களுக்கும் குறைவில்லை

முப்பதாண்டு யுத்தம் முடிந்து, பன்னிரு ஆண்டுகள் கழிந்த பின்னும்
தமிழ் அரசியலோ சாக்கடை, 22 சுயேட்சை குழுக்களும்-
16 அரசியல் கட்சிகளும் மட்டக்களப்பு மாவட்டத்தில் போட்டியிட
ஒற்றுமைமையும், தமிழ்த் தேசியம் சோரம்போன இழி நிலை

வீடு வந்து வாக்கு கேட்ட, தமிழ் தேசிய வேட்பாளர்களோ
யாருமில்லை, தமிழர் வாக்கு தமக்கே என்ற மமதையில்
வீட்டுக்கு வீடு துண்டுப் பிரசுரத்தை -ஆட்களைவிட்டு
வீசி எறிந்தவர்க்கோ குறைவில்லை

தமிழ் தேசியம் பேசி வென்றவர் சிலர், தனவந்தக் கனவில்-
கட்சி தாவிட, தமிழனுக்கு அபிவிருத்தி , வேலை வாய்ப்பு,
கனவானது, உரிமையோ எட்டாத வான் நிலவானது
முடவன் கொம்புத் தேனக்கு ஆசைப்பட்ட கதையானது

அரசியல் கைதிகளோ சிறைகளில், விடுவிக்கப்படாத
காணிகளோ இராணுவத்தின் கொடும் பிடியில்,
வாழ்வாதாரமில்லா விதவைகளோ தெருக்களில்
தமிழ்த் தலைவர்களோ வெளி நாடுகளில்

விலைவாசி வானைத் தொட, ஏழ்மை தலை விரித்தாட
வேலையின்றிப் பட்டதாரிகளும் போராட
கேள்விக் குறியான தமிழ்த் தேசியம், காட்டிக் கொடுப்பு,
மறுதலிப்பு விதியாக அரசியல் விபச்சாரம்

தலைமைத்துவம் இல்லாது பிளவு பட்ட தமிழ் தேசியம்
சேர, சோழ, பாண்டியனாய் அன்று தம்முள் மோதி
தம்மை அழித்த தமிழினம்-இன்றும் ஒற்றுமையின்றி வாட
என்று விடியும் எமக்கென ஒரு காலம்?

அரசியல் சூதாடிகளுக்கு தமிழ்த் தேசியம்
பகடைப் பொருளான கேலிக்கை -தமிழ்
ஈழத் தாயும், பாஞ்சாலியாய் துன்புற்ற வேதனை

கைதட்டலுக்காய் கட்டப்பொம்மனாய்-தமிழ்
அரசியல் வாதிகளின் கர்ச்சனை
எட்டப்பனாய் உள்ளத்திலே கட்சி தாவிட ஒப்பனை

போரின் காயங்கள் இன்னமும் ஆறவில்லை -காணாமல்
ஆக்கப்பட்டவர்க்காய் கண்ணீர்த் தவங்கள் ஓயவில்லை
ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு, ஒற்றுமை நீங்கில் -நமக்குத்
தாழ்வு ஈழத் தமிழனுக்கு இன்றும் புரியவில்லை

வென்ற தலைவர் மாலை சூடி ஊர்வலம்போக,
மக்கள் தெருவில் நின்று வாழ்த்தி கையசைக்க
வாகனத்தில் பறக்கும் ***தேசியக்கொடி***
உள்ளே சுருட்டிப் போட்ட **தமிழர் கட்சிக் கொடி**

அரசியல்வாதிகளுக்கு ஐந்தாண்டும் சுபீட்சமாக
அடிமை வாழ்வு மக்களுக்கு  மாறாத சனி திசையாக
***தமிழ் தேசியமும் அரசியல் வேசித்தனம் என்பதில்***
கண்ணகிக்கும், மாதவிக்கும் மாற்றுக் கருத்தில்லை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra- 17-08-2023

# தமிழ் ஈழத்தாய்

---

பேயழித்ததோ? பிணம் தின்னும் பெரும் பூதமழித்ததோ?
நோயழித்ததோ? பெருந்தீ அழித்ததோ
யாரழித்தார் என் மகனை என
மார்பறைந்தழவில்லை-ஈழத் தாயவள்

மடிந்த மகனை மார்போடணைத்து முத்தமிட்டாள்,
மகன் சிந்திய குருதியால் திலகமிட்டாள்-
பால்வடியும் நேர்முகம் பார்த்து மனம் குமுற-விழிகரைய
இனியொரு மகன் எனக்கில்லை- செந்நீராடி
இம்மண்ணிற்காய்ப் போராட என ஏங்கி நின்றாள்
முன்னொருநாள் போர்களத்தே கணவனையிழந்து
கைம்மை பூண்ட தமிழ் ஈழகுலமகள்

# அஞ்சாமை

---

கொடுந்தீயில் நிதம்  விளையாடும் அக்கினிக் குஞ்சுகளிவை
கொல்லும் செந்தணலில் நடைபோட அஞ்சுமோ?
கொதிக்கும் நெருப்பாற்றில் நீராடும் கரும்புலிகளிவை
எரிமலை குழம்பில்  நீச்சலிடத் தயங்குமோ?

கடும்புயலில் கானம்பாடும் வானம்பாடிகளிவை
கோர அனலில் சிந்துபாடத் தயங்குமோ?
கொடுங்காட்டில் நடமாடும் வேங்கைகளிவை
சுடுகாட்டின் சிறு நரிகளுக்கு அஞ்சுமோ?

***தீயினில் வெந்தது தேசம்***
***செந்தணல் பட்டெரிந்தது  தேகம்***
***சிதையாய்போயின மனைகள்-உடல்***
***சிதைந்தும் போராடின விடுதலைப் புலிகள்***

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-4.-4-2023

# தாய்மையும் கைமையும்

---

யுத்தம் தீய்த்திட்ட கிராமம்-தூசு படிந்து
வண்ணமிழந்த சோகச் சித்திரமாய் காட்சிதர
பாழடைந்த இல்லங்களில்-வௌவால்களின் குடியிருப்பு
பட்ட மரத்திலிருந்து ஒற்றைக்குயிலின் சோக ஒலிபரப்பு

கண்படும் திசை எங்கும் களையும், முட்புதரும் வளர்ந்து
காடாய் மாறிடும் கிராமத்தில், காற்றுக்கு வீழ்வதா
கடும் மழைக்கு வீழ்வதா எனக் காத்திருக்கும்
ஓர் ஓலைக் குடில்.

கூரை வழியே எழும் புகை வாழ்வைச் சொல்ல
ஊளையிட்டு வாலைச் சுருட்டி தூங்கிய நாய்
நன்றி மறவாத நேயம் சொல்ல
வாழ்வை இழந்த வயதான மூதாட்டி

வாரிசுகளையும், வாழ்வு தந்த கணவனையும்
யுத்தம் களவாடிச் செல்ல
தனியே புலம்பி, தனியே வாழ்ந்து
தன் நாயோடு வாழ்கின்றார்.

யுத்தம் கொன்றழித்த பிள்ளைகளையும்,
கணவனையும் நினைந்திட இதயத்திலே செந்நீர்
எல்லாம் நின் செயல் என்றே-விளக்கேற்றி
இறைவனை வணங்கிட விழிகளிலே கண்ணீர்

நெஞ்சிலே ஆறாத புண்ணாய்,அவியாத நெருப்பாய்
அணைந்த உறவுகளின் நினைவுகள்-ஈரவிழிகளில்
இன்றும் வற்றாத கண்ணீர்ச் சுனைகள்
எல்லாம் நின் செயல் என்னும் ஆதங்க நிலைகள்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-09-06.2023

## தாய்ப் பால்

---

தாழப்பறந்த விமானக் கழுகுகள்
வாழப் பிறந்த உயிர்கள்
அஞ்சி ஓடத் துரத்திச் -சாகடித்திட
அழிவில் பிறந்தஅகதிக் கங்கை
பாக்கு நீரிணையைத்
தாண்டி அடைக்கலம் தேடியது

நிலக்கண்ணிகளும்,-பொறிவெடிகளும்
அணை கட்டிய மனித வெள்ளத்தை-முகமூடிகள்
வடிகட்டி எரியும் டயர்களில்-ஆகுதியாக்கிட
குண்டுகள் சப்பித் துப்பிய சக்கைகளாய்-சாலைகளில்
கருகிக் கிடந்த மனிதக் குப்பைகள்

கோயில்களும்,-குடிமனைகளும்
யுத்த நோயால் தீய்ந்திருக்க
குண்டு பட்டு வீழ்ந்த அன்னையிடம்
பால் கேட்டு பிஞ்சு மழலை நெஞ்சுருகக் கதறியது

## சிங்கள வீரன்

சிறிலங்கா இராணுவத்தில் சேர்ந்த சிங்கள இளைஞன்
அப்பாவித் தமிழர் பலரைச் சிறையிலிட்டு
துப்பாக்கியால் சிலரைக் கொன்றழித்தான்.

தமிழர் வாழ்வை உப்பிலும் உவர்ப்பாக்கி
கொள்ளையிட்ட ஊர்களைக் காடாக்கி-
களையாய்த் தீ வளர்த்து வேடிக்கை பார்த்தான்

கன்னியர் கருவில் பாலியல் பழிவாங்கலாய்
கலப்பினத்தை விதைத்தவன் -பின்
கண்ணிவெடியில் உடல் சிதறிட
யமபுரியில் தஞ்சம் பெற்றான்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-1-4-2023

# தமிழா புறப்படு

---

பறக்க முயல்கையில் இறக்கைகளை முறித்தார்
பூக்க முயல்கையில் மொட்டுக்களைச் சிதைத்தார்
பாட முயல்கையில் குரல்வளையை நெரித்தார்
ஆட முயல்கையில் கால்களை உடைத்தார்-
ஏனோ இந்த இனவாதிகள்?

புல்லில் பூத்த பனித்துளியாய்-வாழ்கை-இதில்
மண்ணில் வீழ்வதும் விண்ணில் எழுவதும்
விதி வழியோ ?

மறந்தும் ஈழத்தமிழினம்
மாற்றான் கைபொம்மையாவதா?
நிலை குலைந்தும் ஈழத்தமிழினம்
பேரினவாதத்திடம் சோரம் போவதா?

உரிமையிழந்து அகதியானாலும்
அடிமையாய் வாழ்வதோ?
அற்ப சலுகைகளுக்காய்-எட்டப்பராய்
அடிவருடிகளாய்மாறி மானமிழப்பதோ?

வீரமுடன் வீழ்வது தமிழனாயினும்-மானமுடன்
எழுவது தமிழீழமாகட்டும்-தமிழா புறப்படு
விருட்சங்கள் வீழ்ந்தாலும் விதைகளினால் முளைத்தெழும்
விடுதலைப் போராட்டங்கள் தோற்றாலும்
வீரவரலாறாய் உயிர்த்தெழும் தமிழா புறப்படு

அடிமை விலங்கை உடைத்திட அணிதிரண்டு
போராடுவோம், தமிழ் அன்னை-மணிமுடி சூடிட
மனமுவந்து களம் காண்போம்.
விழுப்புண் மாலையாகட்டும், வீர சுவர்க்கமும்
நமதாகட்டும், தமிழா புறப்படு

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-4-4-2023*

# தணல் பூத்த தாயகம்

---

எரிதணல் ஆறாத ஈழவர் மண்ணில் எங்கும் பிணங்கள்
குண்டு துளைத்து, உடலம் சிதைந்து, அங்கம் களைந்து
ஆவி துடிக்க நாறி மணக்கும் சவங்கள்
இரத்த ஆறு ஓடிடக், கண்ணீர் மழை பொழிந்திட
எங்கும் சோகத்தின் ஆறாத ரணங்கள்

தீமேயும் பூமி தணல் பூத்துக் கொதித்திருக்க
நீர் பூத்த விழிகளில் சோகம் பொங்கி வழிய-யுத்த பூமியில்
தாயொருத்தி புலம்பி அழுது தேடுகிறாள் தன் மகனை

இருள் பூத்த வானம் நிலவின்றிக் கறுக்க
தணல் பூத்த பூமி அனலாய்க் கொதிக்க
கண்ணீர்க் கறை படிந்த முகம்-இயக்கம்
களவாடிப்போன தன் மகனை களத்தில் தேடுது

தீய்ந்து கருகிடும் சடலங்கள் நாறி மணந்திட
வாசம் நுகர்ந்து வானில் கூட்டமாய் மிதந்திடும் கழுகுகள்,
திட்டமிட்ட படுகொலை எல்லாம் போரில் மறைந்திட
பட்ட மரம் தப்பிடப், பச்சை மரங்களை எரித்த யுத்தம்

மனம் நொந்து -பிணம் கடந்து-மேயும்
பிணந்தின்னிக் கழுகுகளை விரட்டி
அடிவயிறு பற்றி எரிய அன்னை தேடுகின்றாள்
தணல் பூத்த மண்ணில் தன் ஒரே மகனை

தணல் சுட்டுப் பாதங்கள் தீய, மனம் சோகத்தால் காய
குன்றாய் குவிந்த சடலங்கள், பாடையின்றி,
ஈமச்சடங்கின்றி தீக்குளிக்க- கண்ணீர்க் குடமுடைத்து
கதறிப் புலம்பி, தன் மகனை தேடுகின்றாள் தாய் ஒருத்தி

பெற்ற வயிறு தீப்பிடிக்க, அன்னை மார்பில் பால் சுரக்க-கழிவாய்
கருவறை பூத்த மலரெல்லாம் கருகிடக் கண்டு மனம் நொந்தாள்
எரியும் தீயில் நுழைந்து தன் துயர் மறக்க
எரிந்தே ஒளியானாள் தன் மகனோடு உறவானாள் அம்மை

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-10-06.2023*

# தர்மம்

---

பஞ்ச தந்திரமும், சாணக்கியமும்
படைப்பலமும் கொண்டு- பிராந்தியத்தில்
இந்திய இராட்சத சிலந்தி-தன்
இராஜதந்திரவலையைப் பின்னிடும் நேரம்.

இனவாதத் தீயில் தமிழினம் எரிபலியாக- சிங்கள
இராணுவமோ அராஜகத்திற்குப் புது இலக்கணமாக
வாழும் உரிமை இழந்த ஈழத்தமிழினம்
ஆளும் உரிமைக்காய்ப் ஆயுதம் ஏந்திய காலமது.

ஆண்டுகள் பல கழிந்திட –ஆறாய்
அழுகையும், இரத்தமும்  கரை புரண்டோடிட
திசைமாறிய விடுதலைப் போராட்டம்
பயங்கரவாதம் என சர்வதேசம் பழித்த காலம்

வளர்த்துவிட்டவர்களே கால்களை வாரி விட,
வரம் கொடுத்தவர்களே- சாபம் வழங்கிட
உறவுகளே ஒருவரை ஒருவர் கொன்று வீழ்த்திட
விரோதிக்கு விரோதி நண்பணான குயுக்தி

நலிவுற்ற ஆயதகுழுக்களும் பாதை மாறிட
பிளவுற்ற புலிகளும் தம்முள் போராடி அழிவுற
எட்டப்பனும், ஒட்டுக் குழுக்களும் காட்டிக் கொடுத்திட
ஆயுதக் கப்பல்களும், அணித்தலைவர்களும் அழிந்திட
பாக்கு நீரிணையை பலமுறை நீந்தி கடந்தவர்ளோ
நந்திக்கடலில் பரிதாபமாய் மூழ்கி மடிந்தார்
அமைதிகாக்கும் படையைத் திணறடித்தவர்களோ,
வெள்ளைக் கொடி ஏந்தி, உயிர் பிச்சைக்காய் மன்றாடி
விசர்நாய்களாய் சுடுபட்டு அழிந்தார்

உயிர்காக்க, ஊர்விட்டு ஊரோடி, இறுதியில்
நந்திக்கடலோரம் நாதியின்றி  இளைப்பாறியவர்,
படையிழந்து, குடியிழந்து, மனையிழந்து, மாட்சியிழந்து
கோல் இழந்து, கொடு விலங்காய்க் கொல்லப்பட
மாவீரர்களே, தர்மமும் உம்மை இகழ்ந்து விலகியதோ?
செய்த கொடும் பாவங்களுக்குத் தண்டனை வழங்கியதோ?
ஆபேலின் இரத்தமும் ஆறுதலடைந்து, அமைதியானதோ?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-10-05-23*

# தீ மேயும் தியாகபூமி

---

குழந்தைகளைச் சிதைத்த குண்டுகளால் -அன்னையர்
குங்குமத் திலகங்களும் நெற்றிக் கண்ணாகி அனல் கக்கின,
கோவலனைக் கொன்ற  காவலர்களால் -ஈழக் கண்ணகிகளின்
சிலம்புகளும்-நீதி கேட்டு தேசத்திற்கு தீ மூட்டின.

தேசமெங்கும் தீ எரிந்திட, சுவாசக் காற்றையும்
பிணவாசம் மிரட்டிட-ஈழமெங்கும் -
இராக்கேலின் ஓயாத ஒப்பாரி-இராணுவத்திலோ
ஏரோதின் மாறாத கொலை வெறி.

அந்திச் சூரியனும் -சிந்திக் கிடந்த
செந்நீர் வெள்ளம் கண்டு முகம் வாட
செந்தணல் உண்ணும் உடலங்களை சுற்றி வந்தே
சொந்தங்கள் கண்ணீர்க் குடமுடைத்தார்

சோகத் தீயணைத்து போராடிச் சோர்ந்த-தாய்களின்
கண்ணீர் வெள்ளங்களுமிங்கே
எரியும் டயர்களில் ஏறிச்செல்லும்-தமிழ்
இளஞர்களின் விடுதலைப் பயணங்களுமிங்கே.

இங்கு குண்டு வீச்சு விமானங்களால்
குடிசைகளும், கோபுரங்களும் ஒன்றாய் சாயும்
நிலக்கண்ணிகளும் பொறிவெடிகளும்
இராணுவத்தை மாய்க்கும்

எரியும் டயர்களே சிதையாக-
எரிந்த உயிர்கள் கரும்புகையாக –மழையாய்க்
கரைந்து சோகம் சொல்லும் மேகங்கள்

ஆகாய மயானத்தில் கரும்புகையாய்-
மனிதப் புதைகுழிகள்-மிதக்கும் சிலுவைகளாய்
வெள்ளைக் கொக்குகளின் சோக அபிநயங்கள்

வேங்கையையும் வெள்ளாட்டையும் வேறுபாடின்றி
வேட்டையாடினார் - கொடிய  வேடர்
முள்ளையும் ரோஜாமலரையும் பாகுபாடின்றி
சுட்டழித்தார் -கொடிய மூடர்

வனவாசத்திலும்-ஆயுத வாசம்
இனவாதத்தால் தேசமெங்கும்-பெருநாசம்

மது போதையிலும் காமவேட்கையிலும்-
தாய்குலத்தில் தணியாத காமப் பசியாற்றி-
ஒரு கொடிய இன விதைப்பை நடத்தி
இராணுவம் முன்னேறிட
கருப்பைக்குள் விளையும் கொடிய கலப்பினம்
கண்விழிக்கு முன் அருவெறுப்பைக் கலைத்திட
புதுநெருப்பைச் சூடிச் சுடரான தாய்க்குலம்

தேசமெங்கும் தீ பரவிட-அகதி முகாம்களில்
சோகவிருள் நிறைந்திட-கம்பு தடிகளை ஆயுதங்களாக்கி
கற்களை கைக்குண்டுகளாக்கி-யுத்த விளையாட்டை
விளையாடிக் களிக்கும் சிறார் குலம்

செஞ்சிலுவைக் கொடிபிடித்த நல்ல சமாரித்தர்
அடிபட்ட மானுடத்திற்கு உதவிக்கரம் நீட்டிட
தள்ளாடும் மனுக்குலத்தின் சிலுவையைத் தாங்கிட
சீரேன் சீமோன்களாய் தோள் கொடுத்த
சர்வதேச மனித உரிமைக் காவலர்

வண்ணமலர்களும் வாசமிழந்தன-பிணவாடையால்
வான்நிலவும் ஒளியிழந்தது-கரும்புகையால்
கானக் குயில்களும் சோகப் பண்ணிசைத்திட
கருவான் கண்ணீர் சிந்தி மழையாய் அழுதது

கீழ்வானச் சிவப்பெல்லாம் கீழே கொட்டிக்கிடந்திட
கண்ணீரில் சோகப் பயிர்கள் மூழ்கி மடிந்திட
காரிருளில் புதிய உதயம் காட்டி எழுகின்றார்
சூரியவேங்கைகள்

வாழ்வோ விடியல் காணாத அமாவாசை இரவு
துப்பாக்கி வெளிச்சங்களே-சாவுக்கு
வழிகாட்டும் துயர நிகழ்வு
***மரணமே மாறாத உறவு-துயரமோ***
***ஒட்டிப் பிறந்த உறவு***

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-1-4-2023*

# தீ

அன்பு தடுக்கலாம், அன்னையின் ஆணை தடுக்கலாம்
அன்பு மனையாளின் கண்ணீர் தடுக்கலாம்
எம்மைச் சிங்கள இராணுவம் தடுக்குமோ?-

பூச்செண்டு சுமந்திட வளையும் பூவுடலே
வெடிகுண்டு தாங்கி எதிரியைக் கொல்ல
வண்டுகள் மோகிக்கும் வண்ணமலர் சூடும்
கன்னியர் படைகொண்ட விடுதலை வேங்கைகள் நாம்

விண்ணிலும் தீ மூட்டினார் வேங்கைகள்
விமானங்கள் வீழ்ந்தன-மண்ணிலும் தீ மூட்டினார்
இராணுவ முகாம்கள் அழிந்தன
கடலிலும் தீ மூட்டினார்-யுத்தக்க் கப்பல்கள் அமிழ்ந்தன
தம்மிலும் தீ மூட்டினார் துரோகிகள் ஒழிந்தனர்
தமிழ் நெஞ்சங்களில் தீ மூட்டினார்
ஜெகஜோதியாய் எரிந்தது சுதந்திரத் தீ

## குடியரசு

ஏகாதிபத்திய அடிமைத்தனத்திலிருந்து
இனவாத அடிமைத்தனத்திற்கு-ஈழத் தமிழர்
இரையான நாளிது.-சிறைமாறிய பொழுதிது
இதில் நாம் கொண்டாட என்னவுண்டு
எம்முரிமை கொன்றாரோடு குலாவிட ஏதுவுண்டு

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-1-4-2023

# தீபாவளி

கீழ்வானச் சிவப்பெல்லாம் மண்ணில் கொட்டிக்கிடந்தது
தாயக அறுவடைக்குத் தமிழர்-சுதந்திர நீர் பாய்ச்சும்
கண்ணீர் மழைக் காலம் இது

தாய்களின் கண்ணீர் சோகத் தீயணைத்து தோற்றுப்போயிட
சேய்களின் உடல்களோ டயர்களில் கருகிப் புகையாய் மாறிட
ஒரு புதிய உதயத்தின் பிரசவ நேரம்

அகதி முகாமமெங்கும் சோக இருள் நிறைத்திட
குப்பி விளக்குகள் எரிய-ஒட்டிய வயிறுகள் காய
“கிருஷ்ணா வருவாயா-நரகாசூரனை அழிப்பாயா?”
விம்மியழுது மனமுருகப் பிரார்த்தித்த
அகதிகளின் கண்ணீர்த் தீபாவளி

விண்ணிலும் மண்ணிலும் வெடியொலி கேட்டிட
வீசுதென்றலும் கருகி நாறிட
எஞ்சி நின்ற குடியிருப்பும் தீயில் கருகிட
வானம் அழுதது.

செஞ்சிலுவைக் கொடியும் சிவப்பானது
அப்பாவிகள் சிந்திடும் குருதியினால்
வெண்மேகங்களும் கண்கலங்கின
எரியும் டயர்ப் புகையினால்

தீயில் எரிந்தவர்கள் வானில்  ஓய்வுகொள்ள-
கண்ணீரில் கரைந்தவர்களை சோகம் காவு கொள்ள
ஆகாய மயானத்தில்-மிதக்கும் கொக்குகளின்
“சிலுவைக்” கோலம்

தாய்குலத்தின் உடல்களில் காமப்பசி தணித்து
மதுபோதையிலும், காமவேட்கையிலும்
ஒரு கொடிய இனவிதைப்பை நடத்தி
முன்னேறிய இராணுவம்

கருப்பையில் களைகள் கண்விழிக்குமுன்
தீபங்களாய் தம்மை எரித்து தீட்டகற்றி
***புதிய தீபாவளியாய் கொண்டாடினார்கள்***
***ஈழக் கண்ணகிகள்***

உயிர் கொன்று-ஊர்களை எரித்து, கழனியை அழித்துக் காடாக்கி
துப்பாக்கி முனைகளில் தேசியக் கொடி பறக்க
வெறியோடு வேட்டுக்களைத் தீர்த்து
தேசிய கீதம் பாடி வெற்றியை கொண்டாடிய இராணுவம்

கீழ்வானச் சிவப்பெல்லாம் கீழே கொட்டிக்கிடந்தது
கண்ணீர் ஆறுகள் கரைபுரண்டோடிட
அழுகையும் புலம்பலும் இறை நீதியைப் பழித்திட
எரியம் டயர்களால் இங்கோர் அஸ்தமனம்

இது சாயங்காலம், இரவு போனால்
இன்னுமோர் புதிய  உதயம்
கவலை எதற்கு? கண்ணீர் எதற்கு?
***நம்பிக்கைதான் வாழ்க்கை?***

நாளை என்பது வெறும் கனவு-நேற்று என்பது
பழங்கனவு, இன்று இருப்பதே நம் உலகு
எல்லாம் இழந்து-புகலிடம் தேடும்
அகதிகளாய் பரிணமித்த பரிதாப வாழ்வு

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-1.4.2023*

# தீப்பொறி

---

ஈழத்தமிழனின், தமிழீழ விடுதலை முழக்கங்கள்
தென்னிலங்கையைக் கலங்கடிக்க, தனி நாட்டுக் கோரிக்கை
சிங்களத்தை அச்சுறுத்த, குண்டாந்தடி முருங்கைத்தடி,
தூக்குமேடை பஞ்சு மெத்தை ஓய்ந்த பழங் கோஷங்கள்

கைக்குண்டும். நிலக்கண்ணியும், துப்பாக்கி வேட்டுக்களும்
வானையும், மண்ணையும் அதிரவைக்க, மூத்த தலைமைத்துவம்
ஒதுங்கி, பூத்து விரிந்து நம்பிக்கை மணம் கமழ்ந்த
இளந்தலைமுறைக்கு வழிவிடப்-பிறந்த ஆயுதப்போராட்டம்

***அகிம்சை வழியில் தோல்வியே விதி***
***ஆயுதப்போராட்டமே வெற்றிக்கு ஒரே வழி***
நெஞ்சைக் கீறி-வடிந்த குருதியால்-திலகமிட்டு
தலைவர்களை வாழ்த்தி வளர்ந்த புரட்சி

அடக்குமுறையின் உச்சத்தில்
குண்டு பட்டு வீழ்ந்த சொந்தங்கள்,
நிலக்கண்ணி விழித்திட
வானகம் போன சிங்களச் சொந்தங்கள்

ஈழமெங்கும் இனக்கலவரம் மூழத்-தென்னிலங்கை
தமிழன் உயிரும் உடமையும் தீக்கிரையாக
புகலிடம் தேடி அகதியாய் கடல் கடந்த சொந்தங்கள்
ஆயுதமேந்திட தமிழகம் போன இளைஞர்கள்

பேரினவாதம் தமிழனை எரிக்க, பிணவாடையில்
இளமனம் கொதிக்க, புலிகளின் தாகம்-தமிழீழ தாயகம்
மந்திரமாய் ஒலிக்க, என்று தணியும் எங்கள் சுதந்திர தாகம்?
ஓயாத போராட்டமானது இன்றோ புயலடித்த ஓய்ந்த
மண்ணும், மனங்களுமாய் தமிழ் ஈழம் வாடுது

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-19-08-2013*

# தீர்வு இல்லாத தீர்ப்பு

---

***கொக்கட்டிச்சோலை*** –தமிழ் ஈழ விடுதலைப் புலிகளின்
அசைக்கமுடியாத கற்கோட்டையும், காவலரணும்.
இராணுவத்திற்கு எட்டும் தொலைவில் இருந்தும்
கிட்டாத நெருப்புக்கனி

பெரும்பான்மை இந்துகள் வாழும்
பிரதேசத்தில்-சிறுபான்மைக் கிறிஸ்தவர்கள்

***ஞாயிறு*** திருப்பலி நடந்து முடிந்த நேரம்-சிற்றாலயத்தில்
முதியோர், பெண்கள், குழந்தைகள் எனச் சிறு கூட்டம்.
திருப்பலியை சிறப்பித்த முகங்களில் சிரிப்பிற்கும்,
செல்வத்துக்கும் கடும் பஞ்சம்.

கவலை தோய்ந்த உள்ளங்கள் கனத்த மனத்தோடு
அமைதி வேண்டிப் பிராத்திக்க, கரங்களை விரித்து
சுவரில் அறையுண்ட கோலத்தில் இயேசுவின் திருச்சுரூபம்

குழந்தைகளுக்கும், நோயாளிகளுக்கும்
ஆசீர் வழங்கிய முதிய குருவானவர்
முழந்தாளிட்டு செபிக்கத் தொடங்கினார்

கவலை தோய்ந்து, வறுமையால் வாடும் முகங்கள்
மனதை வாட்டிட, இனம் புரியாத சோகம் நெஞ்சை நிறைத்திட
விழிகளை உயர்த்தி, சிலுவையில் தொங்கும்
இயேசுவின் திருச்சுரூபத்தை நோக்கினார்

முள்முடி சூட்டி, குருதி தோய்ந்த முகம்
துன்புறும் மானிடத்தை காட்டிட
இயேசுவே துன்புறும் மனிதனாய்த் தென்பட
பண்பட்ட மனம் புண்பட்டு நொருங்கியது.

கொடிய யுத்தம் நெஞ்சை வருத்த-அங்கவீனர்,
அகதிகள், விதவைகள் அழுகுரல் மனதில் ஒலிக்க
விழிகளும், விழிகளும் கலந்துரையாட
மனம் கரைந்துருகியது.

எரியும் மெழுகுவர்திகள் உருகிக் கரைந்து அணைந்திட
தன்னிலைக்கு திரும்பியவர் திரும்பிப் பார்த்தார்-
கோயில் வெறிச்சோடிக் கிடந்தது.

கடைசிப் பாதைக்கு இன்னும் சற்று நேரம்தானிருந்தது.
மோட்டர் சைக்கிளில் பயணத்தை தொடர்ந்த குருவானவர்

பாதை வெறிச்சோடிக்கிடக்க, பல வீடுகள் பூட்டிக்கிடக்க
இங்குமங்குமாய்ச் சில தெருநாய்கள்
சோம்பிப் படுத்துக் கிடந்தன.

பொது மைதானத்தில் மக்கள் கூட்டமாய் குழுமியிருக்க
எங்கும் ஆயுதம் தாங்கிய போராளிகள் காவலில் நிற்க
புலிக்கொடிகள் பறந்திடப் பொதுக்கூட்டம்.

ஒரு கம்பத்தில் கைகால்கள் கட்டப்பட்ட நிலையில்
ஒரு இளைஞன்- அஞ்சி மனம் பதற
மோட்டர் சைக்கிளை நிறுத்திய குருவானவர்

காட்டிக்கொடுப்பு, கொலை, கற்பழிப்பிற்கு மன்னிப்பில்லை
மரண தண்டனை ஒன்றே மறவர் நீதி
காற்றில் கலந்து வந்த வாக்கியங்கள் முற்றுப்பெற
தோன்றிய மூன்று சிறுவர் போராளிகள்

வயது 12 முதல் -15 இருக்கும்
வரிசையாக நடந்தவர்கள் -பார்த்திருக்க
ஒருவர் பின் ஒருவராய்க் கைதியைச் சுட்டார்கள்

“டுமீல்” டுமீல்” டுமீல்” துப்பாக்கி வேட்டுக்கள் அதிர
காக்கை கூட்டம் அலறிப் புடைத்து எழுந்து
“கா கா” என கரைந்து வானில் பறக்க
அஞ்சிய நாய்கள் குரைத்து பின் ஊளையிட்டன

நெஞ்சு பதறிப் பயந்து அச்சத்தால் குருதி உறைய
முதுகுத்தண்டு சில்லிட்டு விறைக்க
முழு உடம்பிலும் அச்சம் மயிர்கூச்செறிந்து பரவ
இதயத் துடிப்பு அதிகரிக்க, பெருமூச்சாய் சுவாசம் மாறிட
கண்ணீர் முட்டி விழிகள் சோரத்
தள்ளாடி சோர்ந்த முதிய அருட் தந்தை

‘என்ட மகனே, ஐயோ என்ட மகனே” ஒரு தாயின் அழுகுரல்
நெஞ்சை பிழிந்து ஓங்கி ஒலித்திட, மக்கள் கூட்டம் பீதியால் உறைந்திட
போராளிகள் அலட்சியமாய் நகைத்திட
சுடப்பட்டவர் தலையிலிருந்தும் நெஞ்சிலிருந்தும் ஒழுகும் குருதி
மண்ணை நனைத்திடப் பொங்கி ஓடியது.

திடீரென வீசிய பலத்த காற்றில், படபட என அடித்துப் பறந்த
இரத்தச் சிவப்பு புலிக்கொடியில் வாயை விரித்த புலி
இரத்த வெறி பிடித்த மிருகமாய் அச்ச மூட்டியது.

பதறிப்போன குருவானவர் பதட்டம் தணிந்திடத்
தரையில் அமர்ந்து ஓய்வெடுத்தார்-பின் தள்ளாடி நடந்து
தம் வண்டியில் ஏறிக் கனத்த மனத்தோடு பயணித்தார்

கண்ணீர் சிந்திக் குருதி வடிந்தோடிய இளைஞன்
கல்வாரி இயேசுவைக் காட்ட-அச்சத்தால்
வியர்வையில் தோய்ந்து ஈரமான வெண்ணாடை
சோகத்தால் நிலைகுலைந்து வேகமாய்த் துடிக்கும் இதயம்

''ஏலி ஏலி லமா சபக்தானி''
''என் தேவனே , என் தேவனே ஏன் என்னை கைநெகிழ்ந்தீர்''
மனம் கேவிக் கரைய சுவாசம் பெருமூச்சாய் விரிய
ஓவென்று ஊமையாய் அழும் மனம்.

தள்ளாடி கால்கள் தடுமாற, நிலை தடுமாறி வண்டி பள்ளத்தில்
விழுந்து எழும்பிட, மெல்ல தொடர்ந்த பயணம்
மனதிலோ கொடிய கல்வாரிப் பயணம்.

''அம்மா'' எனக் கதறிக் கன்றைத் தேடும்
தாய்பசுவின் கதறல்
வழியில் நெஞ்சைத் தொட-வாய்விட்டு
''அம்மா'' என்று- கதறிய குருவானவர்

கண்ணீரோடு கரையும் தாயின் குரல் ஆறுதலின்றிப் போயிட,
நீதி இங்கே மௌனமாய் மரணித்ததே
குருட்டு தேவதையின் நீதித் தராசு-கோணலாய் ஆடிட
ஏரோதுக்களின் காட்டு நீதி மக்களை அச்சுறுத்திட
இராக்கேல்களின் அழுகுரல் இன்றும் ஓயவில்லை

தள்ளாடி வரும் வண்டியில் வியர்த்து, விறுவிறுத்து தளர்ந்து
ஈர உடையோடு வரும் குருவானவரை வியப்போடு நோக்கிய
பாதை ஓட்டுனர்-விரைந்து ஓடி ''பாதர் என்ன செய்யுது
உங்களுக்கு சுகமில்லையா'' பரிவோடு வினவினார்

மௌனமாய்த் தலை அசைத்தவர் வண்டியை நிறுத்திட
பாதையில் ஏறிக்கொள்ள உதவிய பாதை ஓட்டுனர்
பரிவோடு குரவானவரைத் தரையில் அமர வைத்தார்

பாதை-இக்கரையிலிருந்து
அக்கரை நோக்கி-நகரத்தொடங்கியது.
வானில் சிலுவை குறியிட்டு
கொக்கு கூட்டமொன்று மெல்லப் பறந்திட
மீன் ஒன்று வாவியில் துள்ளிக் குதித்தது

ஓயாத யுத்தத்தால் பறக்கும் சிங்கப் புலிக்கொடிகளில்
காயாத மனித இரத்தம், கொடிய காட்டு விலங்குகள்
மானுடத்தை வேட்டையாடி விளையாடிட
விபரீத விடுதலை யுத்தம்.

ஒரு கரையிலிருந்து -மறுகரைக்கு
நம் பயணம்.
இதுதான் சுதந்திரமோ?

உண்மைக் சம்பவத்திற்கு சாட்சி
Rev.Fr.De Coning
என்னிடம் உரைத்தபோது மனதிலே
இயேசுவை அறைந்த காட்சி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-22-05-2023

# திலீபன்

---

இரைமறுத்த வேங்கையொன்று
இந்திய ஏகாதிபத்தியத்திற்கு-அடிபணியமறுத்து
தமிழ் ஈழக் கனவினை நிலை நிறுத்த
“வடக்கிருந்து” தன்னுயிர் உதிர்த்ததின்று.

உயிர் மூச்சும் ஈழத் தமிழ் மண்ணிற்கு சுவாசக் காற்றாக
உதிரமும் வீரம் விளை நிலத்திற்கு நீராக
உதிர்ந்த உடலும் பிறந்த மண்ணிற்கே-உரமாக
உருகிடும் தேகத்தால் தமிழ் ஈழத்தில்
ஈகைச்சுடர் ஏற்றிய வீரவேங்கை

எரிநரகே வாழிடமானாலும்
எரியும் டயர் மலர் மாலையானாலும்
கொடுஞ்சிறைதான் கூண்டானாலும்
கொல்லும் நஞ்சுதான்தான் உணவானாலும்
அக்கினி ஆற்றில் தினம் நீராடும் மாமனிதர்
பூண்ட விரதம் முடிக்குமுன் மாண்டழிவாரோ?
சிறுபூண்டென சிங்களத்தை நொறுக்கிட
பெரும்படையாய்த் திரண்டெழுவாரே

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-1-4-2023

# தொலைந்துபோன கிராமம்

வெள்ளி முளைத்த நள்ளிரவில் புள்ளிவைத்துப்
போட்ட கோலமும் கலையாமல், அழுகையும்,
ஒப்பாரியும் ஊரைக் கூட்டாமல், ஓசையின்றி
யாருமறியாமல் களவு போனது-எங்கள் கிராமம்

காக்கையும், கோட்டானும் அலறிக் கரையாமல் -அச்சத்தில் வாலை
கவட்டுக்குள் புகுத்தி கசிந்த சிறுநீர் நனைத்ததை அறியாமல்,
குரைப்பை மறந்து, நாய்களும் தூங்குவதுபோல் நடித்திட
நள்ளிரவில் காணாமல்போன தமிழ்க் கிராமம்

பணமும், நகையும் பத்திரமாய்ப் பூட்டிய அலுமாரியில் இருக்க
பஞ்சணை கலைந்தும் கலையாமல், வீட்டுத் தளபாடங்கள்
அசையாமல் இருக்க, உயிர்கள் மட்டும் களவுபோன
கறுத்த இராப்பொழுதது.

ஊசி விழுந்தாலும் கேட்கும் நள்ளிரவில்- ஓசையின்றி
ஊர்ந்து வந்த கவசவாகனங்களும், கனரக வாகனங்களும்
ஊரை முற்றுக்கையிட-ஓசையின்றி  உறவுகள் உடுத்திய துணியோடு
பயணப்பட, நள்ளிரவில் தொலைந்துபோன கிராமம்

ஊர் கடந்து அடர்ந்த காட்டில் ஊர்த்திகள் புகுந்து மறைந்திட
இறங்கிய உயிர்கள் வாய் பிளந்த பெருங்குழி முன்னே
வரிசையாய் முட்டிபோட்டு நின்றிருக்க-நெருப்பைத்
துப்பி உயிரைப் பறித்த கொடிய துப்பாக்கிகள்

அச்சத்தால் அழுகையும் சத்தமின்றி ஊமையாகிட
கபாலத்தை குறிவைத்து துப்பாக்கிகள் நெருப்பை துப்பிட-
தொப்பு, தொப்பு எனக் குழியில் விழுந்த உயிர்கள்-
காட்டையும், வனவிலங்குகளையும் அதிரவைத்த ஒலிகள்.

உலா வந்த நிலவும் அஞ்சி-மேகத்தில்
தன்னை மறைத்து அமாவாசை எனச் சொல்லிட
அசுர விழா என்றே இராணுவம் , உயிர்களை
கொன்று மறைத்த கொடிய இராப்பொழுதது

இரவு, பகல் பல கடந்தும் சொந்தங்கள் வீடு வரவில்லை
கடவுள்களை வேண்டியும், சொந்தங்களின்
ஒப்பாரி, புலம்பலும், கண்ணீர் மழையும் ஓயவில்லை,
மனித உரிமைக்காவலரும் மௌன விரதம் பூண்ட நிலை

வளர்ப்பு நாய்களும் ஊளையிட்டு சோகம் சொல்ல
வந்து விருந்துண்ட காக்கைகளும்-கரைந்து, சொந்தம் சொல்ல-
மௌனத்தில் நிலைத்த ஊர்மனைகள்-காற்றில் ஆடும்
கொடியில் உலரப்போட்ட துணிமணிகள்

அரசமரத்து பிள்ளையாரும் தீபமும், பூவுமின்றி கல்லாய் வாடிட
சாலையோரப் புனித அந்தோனியாரும் மௌனம் காத்திட
சென்றவிடம் தெரியாது-புதைந்தவிடம் அறியாது, சோகத்தில்
மூழ்கிய சொந்தம், காணாமற்போன கிராமமோ எம் பந்தம்

ஆண்டுகள் பல போயிட-புல்லும், காடும் வளர்ந்திட
இன்றுவரை, புதைகுழியும் தெரியவில்லை-எங்கள்
கிராமம் தொலைந்த மர்மமும் துலங்கவில்லை

இரானுவம் மறுதலிக்க-நாளேடுகள் வடிகட்டிய
பொய்யை பிரசுரிக்க, பொய்யாய், கனவாய். பழங்கதையாய்
சத்துரு காவு கொள்ள -காணமற்போன
சத்துருகொண்டான் கிராமம்.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-19-08-2013

# தொலைந்த மானுடம்

---

யுத்த நெருப்பின் தீராத அனல்-மண்ணைச் சுட்டு, தென்றலையும் தீய்த்திட
பல காத தூரம் வீசும் அனல், வானையும், கடலையும் தகித்திட
ஆறாத சொந்த பந்தங்களின் துயர், பல பிறவிகளிலும்
மனதில் நின்றெரியும் அணையாத விடுதலையின் சுடர்

நந்திக்கடலோரம்-நின்றிருந்த நாதியற்ற தமிழ் அநாதைகள்
அடிவயிற்றில் அணையாத பீதி நெருப்பாய்த் தகிக்க
சரணடை அல்லாது சாவு, சிங்களத்தின் சிவப்பு எச்சரிக்கை
உயிரை அச்சுறுத்த -சரணடைந்த உறவுகள்

கலந்திடும் குருதி பிணங்களினால் நந்திக் கடல் நாறிட
அழுகையும், கண்ணீரும் மாறாது ஒலித்திட
அடக்கு முறையின் வடிவங்கள்
அப்பாவிகளை சிறையெடுத்த அவலங்கள்

செந்தீயின் சுவாலை சிவந்து தகிக்க-விடுதலை வேட்கை
அவிந்தும் ஆறாத தணலாய்க் கொதிக்க-எங்கும்
குண்டுகள் துளைத்துச் சிதைத்த உடலங்கள்
இளமை, முதுமை என பல பருவகாலத்து உறவுகள்

சுடராய்ப் பற்றி சூளையாய் மாறிய அசுர வேள்வியின்
யாக குண்டத்தில்-போராளியும், அப்பாவியும் ஆகுதியாக
எலும்பும், சாம்பலும் மீதி, சிவந்த மண்ணை ஆள
சிங்கள இராணுவத்தின் அரக்க நீதி

மண்ணில் புதைந்தும், தீயில் எரிந்தும், கடலில் கரைந்தும்
மறைந்த சொந்தங்கள், அப்பாவி, சரணாளி என யாருமில்லை
எல்லோரும் புலிப்போராளிகளே-கொல்
அல்லது கொல்லப்படுவாய் மாறாத பேரினவாத நீதியானது

கதிரும் கண் சிவந்து கடலில் மூழ்கி
ஈமக்கடன் செய்திட, நிலவும் சோகத்தால் தேய்ந்து
தன்னை மறைத்து-அமாவாசை என்றது

மண்ணும் தணல் ஆறவில்லை, தென்றலிலும் சூடு தணியவில்லை
விடுதலையின் கூப்பாடு ஓயவில்லை, சரணடைந்த
சொந்தங்களோ காணமல் ஆக்கப்பட்ட கொடுநிலை
தாய்களின் மனதிலோ ஆறாத் துயரின் கொடிய நிலை

புதைந்தும், கருகியும் மறைந்த சொந்தங்கள்-நெஞ்சில்
ஆறாத காயமாய் நிலைத்திட, காணமல் ஆக்கப்பட்ட
உறவுகளுக்காய் நினைவேந்தலை நினைவு கூர
ஈழத்தமிழினத்திற்க உரிமையில்லை, அவலநிலை

தொடரும் போராட்டங்கள்-பல்லாண்டு
கழிந்தும் தொடர, நெஞ்சில் ஆறாத செங்காயம்
நினைவில் தீராத இமயச் சோகம்.

போதை வஸ்து, கேரள கஞ்சா கடத்தல் பொருளாகிட
போதைக்கு அடிமையாகும் இனம்-சீவர ஆடை வெளிறி,
ஓதும் பிரித்து பேரினவாதத்தின் எதிரொலியாய் மாறிட
உரிமையிழந்த ஈழத்தமிழினம்

போற்றும் எட்டப்பனுக்கு கீரிடம்-தூற்றும்
கட்டப்பொம்மனுக்குச் சிறைவாசம் இனவாத நீதியானது
தேசத்தை கொரோனா அச்சுறுத்த, அதலபாதாளத்தில்
விழுந்த பொருளாதாரம், தேசமோ எரிநரகம்

இனவழிப்பின் இழிநிலை இன்றும் தொடர-ஐ.நா
மனித உரிமை மாநாடுகள் சாதித்ததோ ஏதுமில்லை?
சாவா? வாழ்வா? தமிழன் வாழும் நிலையில்
இன ஒற்றுமை சாரமிழந்த உப்பான கசப்பு நிலை

ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு- ஒற்றுமை நீங்கில்
அனைவருக்கம் தாழ்வு நிதரிசனமானது-இனவாதம்
ஆண்டும்- தமிழன் ஒன்றுபட்ட காலம் கனவானது
***மூவேந்தரும் தம்முள் போராடி வீழ்ந்தது வரலாறானது***

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-20-08-2013*

# துள்ளிவரும் வெள்ளியலை

துள்ளிவரும் வெள்ளியலைகள் ஈழத்தமிழன் துயரை-
அலைக்கரங்களில் அள்ளிச் சென்று, அலைமோதி
தமிழகத்திற்கு சொல்லயிழ, கண்ணகி சிலையிலும் கண்ணீர்
வானுயர்ந்த வள்ளுவர் கண்களிளோ செந்நீர்

குண்டு துளைத்த உடலங்களும், குருதி தோய்ந்த
உடமைகளும்- சிப்பிகளோடு கரையொதுங்க,
கண்ணீர் சிந்திக் கரைந்த உறவுகள்.
கலைந்துபோகும் தமிழ் ஈழக் கனவுகள்

ஆயுதக்கப்பலை கைப்பற்ற-ஆழ்கடலில் கடும் சமர்
குண்டு மழையில்-கடலும் தீப்பிடிக்க
ஆழ்கடலிலும் பேரலலைகள்-அழிந்தாலும்
அசையாத மலையாய் போராளிகளின் மனநிலைகள்

வீரனுக்கு மரணம் ஒரு முறை-தமிழனுக்கு
தன்மானமே பெருங்கொடை, அஞ்சாது போரிட்டு
மடிந்த புலிகள், தீப்பற்றிக் கடலில் அமிழ்ந்த
போராளிகளின் ஆயுதக் கப்பல்

முடிந்த சமரிலும், முடியாத போராட்டம் தொடர
கலைந்த கனவிலும், கலையாத மனவுறுதி நிலைக்க
வீழ்ந்த உறவுகளின் வீரமரணம், வானும் அழுது
அஞ்சலி செய்திட, அலைக்கரங்களிலோ மறவர் பிணம்

மறவர் படைதான் தமிழ்ப் படை
குலமானம் ஒன்றுதான் அடிப்படை
வீழ்ந்தாலும் ஓயாத அலையாய் எழுவோம்
மடிந்தாலும் வித்தாய் மறுபடி முளைப்போம்

கண்ணுக்குள் விரிந்த கனவுகள், மண்ணுக்குள் புதைந்து
அக்கினியில் கலந்தாலும், மறவன் வீரம் மண்டியிடவில்லை
விண்ணேகினாலும் வீரமறவனின் வித்துடல் முளைக்கும்
காற்றோடு கலந்த சுவாசத்திலும் காதல் தேசம் மணக்கும்.

தமிழ் மனங்களில் தன்மானம் தழைக்க,
சுதந்திரகாற்றை ஈழத் தமிழினம் சுவாசிக்க
மீண்டும் எழுச்சியோடு போராடும்

கண்ணீரும், செந்நீரும் கடலில் கலந்திட-கரித்திடும்
உப்பு, மண்ணில் வித்துடல் விதைந்திட, மடிந்தாலும்
மண்டியிட வளையாத தமிழனுக்கு வீரமே பொற்பு

உலகறிந்த எம் துயரரை, உறவாடும் சிங்களம்
அறியவில்லை, பகை மறந்து உறவாட
உரிமையும், நேசக்கரங்களும் இன்றும் முடமான,
கனவான நிலை, பேரினவாதம் ஆளும் நிலை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-19-08-2013

# துப்பாக்கிகளும் மலர்வளையங்களும்

---

அராஜகத்தின் கொடுங்கரங்களுள்
அருட்பணி சந்திராவின் அஸ்தமனம்
கபாலமலையின் கழுமரத்தில்-இன்று
ஒரு தேவமைந்தனின் மரண ஊர்வலம்

ஈழ மண்ணில் இன்று ஒரு கோரப்புயல்-இங்கே
சாய்ந்தவையும், விழுந்தவையும் மண் குடிசைகளோ,
மாடமாளிகைகளோ- மா மரங்களோ அல்ல-மாறாக
மக்கள் மனங்கள் மத நம்பிக்கைகள்

மாக்களுள் ஒரு மனிதன் மடிந்திங்கே போய்விட்டான்,
பூத்த வாச மல்லிகை- மாலை வருமுன் மண்ணில் வீழ்ந்திட
சுட்டு வீழ்த்திய கொடிய அரக்கனாய் விடுதலை இயக்கம்

அர்ச்சகனே அர்ச்சனையான அவலப் பூசைகளுமிங்கே
அனைத்திற்கும் ஆயுதங்களே பதில் எனக் கூறிடும்
பயங்கரவாதிகளின் அராஜக வேதங்களுமிங்கே

ஈழத்தமிழர் இறைமைக்காய் கீதமிசைத்த கோகிலம்
மூடர் கையில் வீழ்ந்ததுமேனோ?
கொடிய வேடர் கையால் மடிந்ததுமேனோ?

சொர்க்கத்திற்கு உம்மை வழியனுப்பி
இமயச் சோகத்தை சொந்தமாக்கிச் சோர்ந்தோம்
சமாதானத்தின் காவலனை சாகடித்து
நெஞ்சத்து நிம்மதியை நிரந்தரமாய் இழந்தோம்

அராஜக வேதத்தின் ஆயுதப் பூசாரிகளால் நரபலிகள்
இந்தியாமீது நாங்கள் கட்டிய நம்பிக்கைக்
கோட்டையிலோ பாரிய வெடிப்புக்கள்

போராளிகளே அரக்கர்களான கலியுகம்?
நரபலி கொடுத்த பயங்கரவாதிகளோ-ஈழ மக்கள்
புரட்சிகரப் போராளிகளான ஈனம்

இன்றும் தேவாசுர யுத்தங்கள்
தேவர்களின் தியாகங்களோ மக்கள் மனங்களில்
அசுரர்களின் அழிவு வரலாறுகளோ மதிற்சுவர்களில்

இதயம் குமறியழ-இனிய மனிதநேயம்
பயங்கரவாதத்திற்குப் பலியானது -ஆயுதவாதம் ,
கொடிய பயங்கரவாதம் நிதரிசனமானது

ஆயுத பூஜைக்கு நரபலியான வெள்ளைப் புறா
அராஜகத்தின் வெறியாட்டதில் மௌனித்துப்போன
மனித உரிமையின் ஆனந்த நிலா

எங்கள் வளர்பிறையின் வாழ்வில் இன்று கோர அமாவாசை
எங்கள் ஒளிச் சுடரை அணைத்திட இந்தியாவின் ஒத்தாசை?

ஆயுதம் தாங்கியவன் எல்லாம் போராளியுமல்ல
அப்பாவிகளின் உயிர்களும்-பலியாடுகளுமல்ல,
உண்மைக்காய் அஞ்சாது மடிவது ஆண்மை
நரபலிகளால் ஈனர்களுக்கு என்ன பெருமை?

துப்பாக்கிகள் எல்லாம்-கல்லறைக்குள் தூங்கிடப்போனால்
மலர் வளையங்களோடு மக்கள் அணிவகுத்து வருவோம்
ஆனந்தக் கண்ணீரை அஞ்சலியாய் செலுத்தி
நித்திய இளைப்பாற்றிக்காய் பிரார்தனை செய்வோம்

உரிமைக்காய் தொடங்கிய விடுதலைப் போராட்டம்
இயக்க மோதல்களால் திசை மாறி
பயங்கரவாதமாய் விகாரமடைந்த வெறியாட்டம்

மனித மனங்களில் நீதியை விதைத்து
அமைதியின் அறுவடைக்காய் காத்திருக்கும்
அகிம்சாவாதிகள் நாங்கள்-ஆயுததாரிகளே
இறுகி மூடிய எங்கள் இதழ்களைத் தாண்டி-
உங்கள் காதுகளைச் சேர, சாபங்களோ,
கோஷங்களோ எம்மிடம் இல்லை

ஏனெனில் நாங்கள் சாத்வீக மனிதர்
ஆயுதங்களில் நம்பிக்கையில்லாக்
உங்கள் மொழியில் கோழைகள்
***சத்தியம் வெல்லும் -சாத்வீகமே தர்மம்***
எம் அசையாத நம்பிக்கை

***அன்பே சிவம்- வாழ்வே தவம்***
*Pax Ravichandra-3-04-2023*

***வண பிதா. சந்திரா பெர்ணாண்டோ 6.6.1988 ஆலய வளாகத்தில் சுட்டுக் கொல்லப்பட்டார்.***
Rev.Fr.Chandra Fernando was assassinated by EPRLF on.6.6.1988.at his Parish house-in Batticaloa

# உழவர் பூமி

---

வியர்வையும், மழையும்-செழிக்கவைத்த பூமி
வற்றாத உணவுக் களஞ்சியமாய் நின்ற "சாமி"
யுத்தத் தீயில் கருகி காடாகிப்போகும் கழனிகள்
பட்டினியால் காயும் ஏழை வயிறுகள்

உழைப்பால் செழித்த பூமி, ஓங்கார யுத்தத்தால் கருகிட
கண்ணீர் காய்ந்த முகங்களில் கவலையின் ரேகைகள்

மழைவேண்டி காத்திருக்க-விமானங்கள்
குண்டுமழை பொழிந்தன-விதை முளைக்க காத்திருக்க
பகை முளைத்து பயிரானதென்ன?

அரிவாளும், மண் வெட்டிகளும் ஆயுதமாகிட
புது வாழ்வில் புரட்சிப்பயிர் செய்திட
உழவர்களும் ஆயுதமேந்தினார்

உழுது விளைந்த முன்னோர் நிலத்தை
உயிரை கொடுத்து காப்போம் என்றே-மாவீரராய்
மண்ணை தொழுது உறுதிமொழி எடுத்தார்.

தெம்மாங்கு பாடி வயல்களுக்கு நீர் இறைத்தவர்
நிலக்கண்ணி விதைத்தார்
நெல்லும், தானியமும் அறுவடை செய்தவர்
மண் விடுதலைக்காய்ப் போராடி குருதி சிந்தினார்
மண் வாழ தம்முயிரையும், உடலையும்
பிறந்த மண்ணுக்கே உரமாக்கினார்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-22-05-2023*

# உண்மையின் குரல்

---

ஆயுதவாதிகளே நீங்கள் இரட்சகர்களுமல்ல-தோள்
சுமக்கும் ஆயுதமெல்லாம் மீட்பின் சிலுவையுமல்ல
அராஜகம் மீட்பின் பாதையல்ல--அடிமை
மானுடமே விழித்தெழு
அன்பே சிவம்- சத்தியமே பாதை

உண்மையின் மனச்சாட்சி -போராளியே
உன்னைத் தொடாத போதெல்லாம்-விடுதலை
வேள்வியின் அக்கினி புனிதம் இழந்த அவலம்

உன் வேள்வித் தீயில்-ஆகுதியாய்
அப்பாவி உயிர்களும்-அநீதக் கப்பங்களும்
சிறுவர் போராளியின் மரண ஓலங்களும்
தீயும் போதெல்லாம்-நீதியில்லா
உன் வேள்வியும் அசுர யாகம்

அமைதிப் பிரியர்களும்-சீரிய சிந்தனையாளர்களும்
உன் புரட்சித் தீக்கு-நெய்யானபோதெல்லாம்
நெஞ்சமெங்கும் பூகம்பம்-அப்பாவிகளின்
இரத்தம் இனபேதமின்றிச் சிந்தப்பட்ட போதெல்லாம்
இதயத்திலே சோகச் சுனாமி

மசூதிகளிலும் விகாரைகளிலும் மாண்டுபோன பக்தர்களும்
ஓடும் ரயிலிலும் பஸ்களிலும் உடல் சிதறி மாண்ட பயணிகளும்
தூங்கப்போய் விழிக்காமல் மயானமாய் மாறிய
ஏழைக் கிராமங்களும்-மனிதநேயம்
அங்கிகரிக்காத மானிடப் படுகொலைகளே

உங்கள் பாதையிலே எத்துணை இரத்த ஆறுகள்-
நீங்கள் சிந்தியவை தியாகமாய்ச் சிவக்க-உங்களால்
சிந்தப்பட்டவை-புரட்சியை குரூரமாய்ப் பழிக்க-
புரட்சி பயணத்தில் போராளிகளும்-கொலையாளிகளாய்
விகாரமடைந்த கொடுமை-பயங்கரவாத நிலைமை

இனச் சுத்திகரிப்பாய்-யாழ்மண்ணிலிருந்து
இல்லிடமிழந்து-வாழ்வாதாரமிழந்து
முஸ்லீம் சகோதரர் விரட்டியடிக்கப்பட்டபோது
எல்லா நீதி-தராசுகளிலும் உங்கள் நியாயம்
“அநியாயமாய் மாறிய அவலம்”

சுற்றம் பகைத்து-சொந்தம் பகைத்து
வளர்த்த பந்தம் பகைத்து-வாழும் நீதி பகைத்து
விடுதரைப் போராட்டமாய்த் தொடங்கி
இறுதியல்  பயங்கரவாதமாய் முடிந்த
உங்கள் விடுதலைப் பயணம்தான் என்ன?

புரட்சியின் வித்துக்களே-
நீங்கள் முளைத்தபின் களைகளானதுமேனோ?
கண்ணீரால் வளர்த்த சுதந்திரப் பயிரை
அறக்கொட்டிகள் அழித்ததிட
கைகட்டிப் பார்த்து இரசித்ததுமேனோ?

"சத்தியவமேத ஜயதே"

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-31.3.2023

# உண்மையைத் தேடு தமிழா

---

செல்வரும், உயர் குடியும் புலம் பெயர-ஆயுதம் ஏந்தி-
இனவாத இடி தாங்கியாய், ஏழைகள் போரடி மடிய,
ஆறாய் சிந்திய இரத்தம், ஓயாத அழுகை, ஒப்பாரிச் சத்தம்
பொன் வழங்கிப் போரை ஊக்குவித்த "புலம்பெயர் ஈழத்தமிழர்"
சொந்த மண்ணில் அகதியான ஈழத் தமிழன்

போராளிகள் கொள்ளையிட்ட பிள்ளைச் செல்வங்களுக்கும்,
கப்பத்துக்கும், சிந்திய குருதிக்கும் குறைவில்லை
விடுதலைப் போராட்டம், பயங்கரவாதமாய் மாறிட
அழிவில் முடிந்த போர், காடாய் மாறிட்ட ஊர்

பத்தாண்டு கடந்த பின்பும் ஆறாத காயங்களாய்,
பல்லாயிரம் விதவைகள், அகதிகள்-அநாதைகள், அங்கவீனர்
காணாமல் ஆக்கப்பட்டோர்-விசாரணையின்றி
சிறைகளில் தடுத்துவைக்கப்பட்ட அரசியல் கைதிகள்

ஏழைகளின் குரல் இறைவனுக்கும் எட்டவில்லை
நல்ல சமாரித்தனாய் இங்கு யாருமில்லை
நாதியற்ற ஏழைகளின் வாழ்வில்
தமிழ் கட்சிகளால் என்றுமே விடியலில்லை?

புலம்பெயர்ந்த தமிழர் தமிழ் ஈழ அரசமைத்து ஆள
மனித உரிமை மாநாட்டில்-கொடி பிடித்து கோஷம் எழுப்பிட,
கலைந்த தமிழ் ஈழக்கனவும் மலருமோ?
கலையாத ஏழைகளின் துயர உணர்வும் மறையுமோ?

ஈழத் தமிழ் அரசியல் இனவாதப் பாதையில் நடைபோட,
வடகிழக்கு விடியலின்றி வறுமை இருளில் தள்ளாட-விலை
மலிந்த கற்பு, கடத்தல் பொருளாய் கஞ்சா. போதை வஸ்து

தமிழன் ஒன்றுபட்ட வரலாறும் உண்டோ?- ஒற்றுமையின்றி
சேர, சோழ, பாண்டியராய் போரிட்டு மடிந்ததே வரலாறு
கனடிய புலம்பெயர் தமிழர் வாழ்விலும் இது கண்கூடு
தமிழா ஒற்றுமை நாடி உண்மையைத் தேடு

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-02-06-2023

# உதயம் காணாத இரவுகள்

---

பாதைகள் வேறாயினும், பயணத்தின் முடிவு ஒன்றே
என்னும் மதங்கள் சடங்காய் சீரழிய, சட்டமும், நீதியும்
ஏட்டில் உறங்க, இன, மத, மொழி வெறி மனங்களை ஆள
முடிவுக்கு வந்த யுத்தம் கங்கையாய் ஓடிய மனித இரத்தம்.

குண்டு மழையில் உயிர்கள் மடிய
கண்ணீர்க் கடலில் தாய்க்குலம் தவிக்க
எரியும் டயர்களில்-நடமாடும் சுடுகாடு
ஒப்பாரியும், புலம்பலும் ஓயாத வீடு

காணாமல் போனவர்க்காய் கண்ணீர்த் தவங்கள்
கஞ்சிக்கும், கூழிற்கும் அல்லாடும் விதவையினம்,
அங்கவீனர், அகதி, அநாதை கொழுகொம்பின்றி
மண்ணில் அல்லாடும் முல்லையினம்

காடு மண்டிய ஊர்களும்,கண்ணி வெடிக்காடான கழனிகளும்
ஊனமுற்ற கால் நடைகளும் முறிந்த பனைகளும், சாய்ந்த
தென்னைகளும் ஆறாத காயமாக-வடியும் கண்ணீரும்,
ஊமையாய் விம்மும் நெஞ்சமும் ஓயாத சோகம் சொல்லும்

கனவுகள் மலருமுன் கருகிய மொட்டுக்கள்-மண்ணுக்குள்
புதைந்து, கண்ணுக்குள் கசிந்து, நெஞ்சுக்குள் வாழும்
சொந்தங்கள், கனவாய் பழங்கதையாய் மாறிட
நிம்மதி பொய்யாய், புகையாய் போனதே மனம் புலம்பும்

எம் கண்ணீரில் ஏழ் கடலின் உப்பு, செந்நீரால்
மண்ணும் சிவப்பு, ஆலா வட்டமிட்ட வானில்
கழுகுகளின் ஆரவாரம், அலைமோதும் கடலோரம்
அலை ஒதுங்கும் பிணங்களின் மௌனராகம்

மனிதப்புதைகுழிகளும், மாவீரர் துயிலுமிடங்களும் பாழ்பட
வீழ்ந்த இராணுவத்திற்கு அஞ்சலி செலுத்தி வெற்றித் திருவிழா
எடுக்கும் தேசியம், வீழ்ந்த சொந்தங்களுக்கயாய்
“ நினைவேந்தல்” எடுக்க தடைவிதிக்கும் பேரினவாத அராஜகம்.

உதிர்ந்து, புதைந்து எரிந்து மறைந்த சொந்தங்களுக்காய்
அழுது, நாளும் இதயத்தில்-சோகத்தை அடைகாத்து வாழும்
அவல வாழ்வில் நிம்மதி ஏது?

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-19-08-2013

# வாகரை–தைப்பொங்கல்

அகதிகளின் சரணாலயம்-இன்று
ஆயுதவாதிகளின் போர்க்களமானது.
சுந்தரப் பூவனமொன்று-சூறாவளியால்
சின்னா பின்னமானது இன்று.

களையெடுப்பின் பெயரால்-குடியிருப்புகளிலும்
விளை நிலங்களிலும் குண்டு வீச்சுக்கள்
சமாதானத்திற்கான யுத்தத்தில்-சம்பூர், தோப்பூர்,
மூதூர் முடிந்து-வாகரை நோக்கி புதிய படையெடுப்புக்கள்

கந்தைக்குள் நொந்த உடல்கள்
கஞ்சிற்கும் கூழிற்கும் கையேந்தும் நிலைகள்
நாளும் புகழிடம் தேடி ஓடிடும் மனிதக் கால்நடைகள்
ஆயுதவாதிகளின் உயிர்காக்கும் மனிதக் கேடயங்கள்?

வெயிலும் மழையும் விளையாடும் ஓட்டைக் குடில்கள்
அகதிகளின் இடைத்தங்கல் முகாம்கள்
பசியும் நோயும் வாட்டிடும் உடல்கள்
உயிரின் உன்னதக் குடியிருப்புக்கள்

கண்ணீரிலும் கவலையிலும் காயும்
ஒளியிழந்த அமாவாசை நிலாக்களில்
புன்னகைப் பூக்கள் -வெறும் கனாக்களே-பூவும்
பொட்டும், மஞ்சளும் குங்குமமும் கானல் நீரே

உணவிற்கும் மருந்திற்கும் பெருந்தட்டுப்பாடு
உயிர்காக்கும் சிகிச்சைக்கோ இராணுவக் கட்டுப்பாடு
குடில்களிலும் கூடாரங்களிலும்-அழுகையின் கூப்பாடு
சர்வதேச சமூகமோ கண்ணிருந்தும் குருடான நிலைப்பாடு

குண்டுத் தீயில் தீக்குளிக்கும் குடியிருப்புகள்
ஆளணிப் பற்றாக்குறையைத் தீர்த்திட-நாளும்
ஏழைச் சிறார்களை பலிகொள்ளும்
ஆயுதவாதிகளின் சிறையெடுப்புகள்

ஏழைகளுக்கு சாக்கடையும் கழிவறைக் குழிகளும்
காப்பகங்களான அவலம்-உண்டு கொளுத்த
ஆயுதவாதிகளுக்கு- அரிசி மூட்டைகளே
காவலரண்களான ஆடம்பரம்

தோட்டாக்கள் கொத்திய மூட்டைகள்
அரிசியை துப்பிச் சலித்திட
குண்டுகள் வீழ்த்திய குடிமனைகள்
கல்லும், சாம்பலுமாய் மாறின

பசி மூட்டும் தீ சாண் வயிற்றை எரித்திட
போர்ப் பயம் மூட்டும் தீ-உயிரை வாட்டிட
பிடியரிசிக்கே கையேந்தும் அகதிகள் -பொங்கல்
கொண்டாட- புத்தாடைக்கும் மண்பானைக்கும்.
போர்க்களத்தே எங்கு போவார்?

பல்குழல் பீரங்கிகளும் எறிகணை வீச்சுகளும்
இடியாய் முழங்கி மின்னலாய் விழுந்து
குடியிருப்பை அழித்திட-ஆயதவாதிகளின்
போர்ப் பொங்கலோ இங்கு.

காவலரண்களின் மண் மூட்டைகளை
கொத்தி கிழித்து இரைதேடிய புள்ளினம் ஏமாந்தது அன்று
நாறி அழுகும் பிணங்களை-உண்டு மகிழ்ந்த கழுகினம்
எழுந்து பறந்தது என்னே பெருவிருந்தென்று இன்று

காவலரண்களில் சிதறிக் கிடந்த-நெல் மணிகளை
ஏழைகள் பொறுக்கிச் சேர்த்திட-அழுகி மணக்கும்
பிணங்களைப் புறந்தள்ளி புதியவை தேடி
போர்க்களம் நாடிப் பறக்கும் கொழுத்த கழுகுகள்

குண்டு சாய்த்த குடிசையின் எச்சங்கள் அடுப்பாக
சிப்பாயின் தலைக்கவசம் பொங்கல் பானையாக
கொட்டிக்கிடந்த அரிசியையும்
குமுறிப் பெய்யும் மழைநீரையும் கொண்டு
பொங்கினார்-சுந்தரத் தமிழர்
கண்ணீர்பொங்கலாய்த் தைப்பொங்கலை இன்று

அடுப்பின் நெருப்பணைக்க நீர் போதும்-
நெஞ்சிலெரியும் அவியாத் தீயணைக்க-சிந்திய
கண்ணீரும், செந்நீரும் போதாதே- கதறிடும் ஏழைகள்,
கண்ணிருந்தும், குருடாய், காதிருந்தும் செவிடாய்
மனித நேயமில்லாத ஆயுதவாதிகள் அரக்கர்களே

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-1.4.2023*

# வாக்காளப் பெருமக்கள்

---

ஆண்ட பரம்பரை மீண்டும் தம்மைத் தாமாள-
தமிழ் மக்களே-தங்கள் பொன்னானை வாக்கால்
எம்மை வெற்றி பெறச்செய்யுங்கள்-உயிர் தமிழிற்கு,
உடல் மண்ணிற்கு கோஷம், வேட்டி, சால்வை வேஷம்

வாக்களித்து -வாக்கை அழித்த வாக்காளர், வாக்களிக்க மீண்டும்
ஐந்து வருடம் காத்திருக்க, வெற்றி பெற்ற தமிழ் வேட்பாளர்
வாக்குறுதிகள் காற்றில் பறக்க நாடாளுமன்றம் சென்றார்-
நாதியற்ற மக்களோ புலம்பி, மனம் வெதும்பி நின்றார்

தேர்தல் கால கோஷமாய் தமிழ் தேசியம் மேடையில் முழங்க
புலிக்கொடி நிழலில்- புல்லுருவிகளும் போராளிகளாய் கர்ச்சிக்க
எட்டப்பனே, கட்டப்பொம்மனாய் வேஷம் போட்ட வேசித்தனம்

கட்சித்தாவல் கண்டு மந்திகளும் வியக்க
கறுப்புப் பணத்திற்கு சோரம் போகும் அரசியல்,
விபச்சாரத்தை மிஞ்ச, தேர்தல் சூதாட்டத்தில்
மக்களோ பகடைப் பொருள், தலைவனோ சூதாடி

வாக்காளப் பெருமக்கள்-வாக்குறுதியில் மயங்கி-தேர்தல்
சூதாட்டத்தில் வாக்கை இழந்தார், சூதாடிகள்
வாக்கை கொள்ளையிட்டு நாடாள-அப்பாவிகளோ
காடாள இன்னோர் மகா பாரதம் இங்கே.

பாண்டவர், கௌரவராய் தமிழ் உறவுகள்
பகை கொண்டு ஆடும் தேர்தல் சூதாட்டத்தில்
பாஞ்சாலியாய் தமிழ் தேசியம்

தொடர்ந்த அகிம்சைப்போராட்டங்கள் தோல்வியில் முடிந்திட
விரக்தியின் விளிம்பில் -இளைய தலைமுறையின்ஆயுதப்போராட்டம்
வன்முறைாய், பயங்கரவாதமாய் அழிவுற, கண்ணீர் கறையும்,
குருதிக் கறையும் காலத்தால் அழியாத சோகக்கதை

தூக்கு மேடை பஞ்சு மெத்தை, குண்டாந்தடி முருங்கைத்தடி
புலிகளின் தாகம் தமிழ் ஈழத் தாயகம், கோஷங்கள்
ஓங்கி ஒலிக்க-கலையாத தமிழ் தலைவர்களின் வேஷங்கள்
தமிழ் தேசியம் சோரம் போக அரசியல் விபச்சாரங்கள்

என்று தணியும் எங்கள் சுதந்திர தாகம்-
என்று மடியும் எங்கள் அடிமையின் மோகம்-பாரதி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-19-08-2013

# வாழ்த்து

வெஞ்சிறையும் வீரமரணமும் நஞ்சின் நற்சுவையும்
அஞ்சிடா வேங்கைக்கு அமுதே
துஞ்சுதல் ஈழத்தமிழர்க்காய் தூயகடன் என்றே
அஞ்சிடும் அடவியுள்ளும் பாசறை அமைத்தார்
காயத்தின் கடைசித்துளிக் குருதியும்
வற்றி ஓயும்வரை கடும்போரென்றார்

வணங்காமுடி சூடிய அடங்காத் தமிழர்
அந்நியர் இந்தியருக்கும் அஞ்சிடாத சூரர்-
ஈழத்தமிழர் உரிமைக்காய் விடம் சூடி
தினம் போராடும்
விடுதலைப் புலிகள் வாழ்க வாழ்கவே.

## பெருமூச்சு

நாயாய், பேயாய் நடுத்தெருவில் சுடுபட்டு
தீயாய் புகையாய் தேய்ந்த டயர்களில் எரியுண்டு
போராடித் தேடிடும் தமிழ் ஈழச்சுதந்திரம்-
ஒற்றுமையின்றி வாடி மடியுமோ?
வெறும் கனவாய் கலைந்து மறையுமோ?

அஞ்சி. அஞ்சி அச்சநோயினால் மாயுமோ?
அடிமை கட்சி மாறி எட்டப்பனாய் மாறுமோ?
இத்துணை காலமும் இழந்தவை வீணாகுமோ?
அத்தணை தியாகமும் விழலுக்கிறைத்த நீராகுமோ?

***அன்பே சிவம்-வாழ்வே தவம்***

Pax Ravichandra-26.3.2023

# வணங்கா மண்

---

வணங்காமுடி வாழ்ந்த மண் எங்கும்
வாழ்விழந்த மானுடத்தின் அவலங்கள்
பிணங்களின் குடியிருப்பாய்
புதுக் குடியிருப்பின் தோற்றங்கள்.

எறிகணைகள் மூட்டிடும் தீயில்
குடிமனைகள் சாயும்-குண்டு வீச்சுக்கஞ்சி
குழிமுயல்களாய் பதுங்கு குழிகளில்
இழிந்த வாழ்க்கை தொடரும்

மாவிலங்குகளாய் வேட்டையாடப்பட்டு, மந்தைகளாய்
விரட்டியடிக்கப்பட்டு, ஊர் விட்டு ஊரோடி-
மரநிழலில் தஞ்சம் கொண்டு-பிடிச்சோற்றுக்கு
அலையும் அவல வாழ்வு கண்ணீரை வரவழைக்கும்

கொட்டும் மழையில் குண்டுகள் மூட்டிய தீயில் சோகக் குளிர் காய்ந்து
திக்கெட்டும் தீமூட்டும் போரால்-தெருவெங்கும் தீய்ந்து கிடக்கும்
உறவுகளைத் தாண்டி தொடரும் யாத்திரை-தமிழ் ஈழத்துக்கான
தீர்த்த யாத்திரையும் தீ-மிதிப்புமாகும்

அநாதை, விதவை, அகதி, அங்கவீனர் என உருவழிந்த
மானுடத்திற்கு வாழ்வு சிலுவைச் சுமையாக
சுடுமணல் வருத்திடக் கொடுவெயில் தகித்திட
குடி நீருக்கும் பிடியரிசிக்கும் கூடவே மருந்துக்கும்
மானுடம் தவமாய்த் தவமிருக்கும்

ஆழ்கடல் அச்சுறுத்த, ஷெல்வீச்சு பயமுறுத்த
மரணம் துரத்திடும் வாழ்வில் குழிநண்டுகளின் குதூகலம்
ஈழத்தமிழன் தேடும் சுதந்திரத்தை எள்ளி நகையாடும்

காயமுற்ற காயங்களை
கடல்வழியே காவிச்செல்லும் கப்பல்கள்
கூவியழும் உறவுகளை
விட்டுப் பிரிந்த ஊமைச் சடலங்கள்.

அனாதைகளாய் ஈழத்தமிழர் அல்லுற
ஈழத்தமிழன் அழுகுரல் காட்டி
வாக்குப் பிச்சை கேட்கும் கபட நாடகம்
தமிழகத்தில் அரங்கேறும்

குடியிருந்த மனையும்- குண்டு வீச்சுக்கு இரையாக-
துணையிருந்த தாலி உறவும் எரிபலியாக
மடிவளர்ந்த மழலையும் மருந்தின்றி நோய்க்கிரையாக
கர்ப்பிணி இட்ட அடியெங்கும் இரத்தக்கறைகள்
எடுத்த அடியெங்கும் குண்டுகள் சிதைத்த உடலங்கள்

திக்கெட்டும் தீ சுட்டு பட்ட மரங்கள் இறைவன்
திருவிளையாடலில் இவள் வாழ்வும் நாளும் தீயில் ஆடும்
“நடராஜனின் ஊழித் தாண்டவங்கள்”

எரிநெருப்பாய் சுடுமணல் வருத்தும், கொட்டும் மழை
இருப்பை அச்சுறுத்தும், பசியும் பிணியும் நிழலாய்த் தொடர
சிங்கள இராணுவம் சீரழிந்த மானுடத்தை
வன்னிக்காட்டு விலங்குகளாய் வேட்டையாடும் அவலம்
வீர சாகசமாய்த் தொடரும்.

இல்லிடமிழந்து வாழ்வின் இலட்சியமிழந்து கூடவே சொந்தமிழந்து
அனாதைகளாய் சொத்திழந்து பரதேசிகளாய், உயிர் பிழைக்க
ஓடிவரும் மானுடத்தை மந்தைகளாய் கூட்டிச் சேர்க்கும்
மற்றோர் திறந்த சிறைக்கூடமாய், மாறும் இடைத்தங்கல் முகாம்கள்.

பிணம் குவியும் பெருநிலத்தில் பேரினவாதத்தின் வெற்றி கோஷங்கள்
யுத்தத்தை முன்னெடுத்து-தமிழகத்தில்-ஆட்சியமைக்க
உடன் பிறப்பின் இரத்தத்தை விலைபேசும்-
தழிழக அரசியல் கட்சிகளின் அசிங்க விபச்சாரங்கள்

ஈழத்தமிழனுக்காய் -எரிபலியான மாமனிதர்களின்
ஒப்பற்ற தியாகங்கள் காலமெல்லாம் ஈழத் தமிழன் நெஞ்சில்
கல்லில் எழுத்தாய் நிலைத்திட, புலம்பெயர் ஈழத்தமிழர்களின்
ஓயாத போராட்டம் தவமாய்ப் பலித்து, உலகின்
கவனத்தை ஈர்க்குமோ? யுத்த நெருப்பைத்தான் அணைக்குமோ?

நாதியில்லாத மாந்தர்க்கு நீதி துணை நிற்கும்
நீதி எழுதாத எந்த வெற்றியும் நிரந்தரமல்ல
அடக்குமுறைகளால் சுதந்திரம் ஒடுக்கப்படலாம்
வெல்லப்படுவதில்லை வரலாறாகும்

எழுந்து பறக்க முனைந்த இனத்தின்
இறக்கைகளை முறித்துச் சிறையிலிட்டார்
இதழ் விரித்துப் பூக்க விளைந்த சுதந்திர மலரை
இனவாதத் தீயில் கருகி மடியவிட்டார்.

குருதியில் குளித்து, பெருநெருப்பை மிதித்து
விடுதலைக்காய் யாத்த தவம்
பழங்கதையாய், வெறுங்கனவாய் போனதோ?
புலிப்பயங்கரவாதமாய் தோற்றதோ?

எரிந்த ஊர்களும் அறுந்த தாலிகளும்
அழியாத் தடயங்களாக
வணங்காமண் எங்கும் ஆறாத ரணங்கள்
மனம் எங்கும் துயரச் சுனாமியின் தடங்கள்

குண்டுகள் பொழியும் தீமழையில் சேதனக் குப்பைகளாய்
வெந்தழியும் தமிழினம், தந்தையும் தாயும் சிந்து பாடி
வாழ்ந்த மண்ணில் விலங்குகளாய் வேட்டையாடப்படும்-மானிடம்
இன்று-கந்தையாய் நொந்து-கஞ்சிற்கும்
கந்தைக்கும் கையேந்திடத் தாழ்ந்திட்ட பேரினம்

சிந்தையில் எற்றிய சுதந்திரத் தீ அணையுமோ?
வெந்து தேகம் பிடி சாம்பலானாலும்
நெஞ்சுற்ற சுதந்திர தாகம் தணியுமோ?

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-27.3.2023*

# வண்ணக்கனவு

---

ஏழ்கடலினும் ஆழம் எம் நெஞ்சுற்ற காயம்
வான் பரப்பிலும் விசாலம் எங்கள் துயரம்
எரிமலை குழம்பிலும் அனலாய் எம் பெருமூச்சு
ஊழிலும் வலிதாய் எங்கள் நெஞ்சுறுதி

வான் பொழியும் தீ மழையில் நீராடி
ஊன்பொசுங்க உதிரம் உறையும்
போர் முனையில் தினம் விளையாடி
நெருப்பாற்றில் நீந்துவது எம் நெடும் பயணம்
தீயாலும் தீயாதது எம்மவர் தியாகம்

குண்டுகள் தோண்டிய குழிகளில்
நண்டுகள்போல் பதுங்கியே
கடல் மணல்போல் காணும் எதிரிகளை
கதிகலங்டகிடப் பந்தாடும் விடுதலைப் புலிகள் நாம்
காடுகள் நாமுறையும் கூடு-தமிழ் ஈழ தாயகமோ
எம் விழி காணும் வண்ண வீடு

## தமிழன்–2007

கண்ணீர் வெள்ளத்தில் நீந்தும் கயல்கள்
பெருமூச்செனும் புயலில் தினம் தள்ளாடும் மனங்கள்
யுத்தத்தால் சுடுகாடான ஊர் மனைகள்-வாழ்வோ
நாளும் புகலிடம்தேடி புலம்பெயரும் அகதி-நிலைகள்

***அன்பே சிவம்–வாழ்வே தவம்***
Pax Ravichandra–26.3.2023

# வன்னிமர நிழலில்

---

சாரை சாரையாய் எறும்புகளாய் ஊர்ந்து-கூடு
சுமக்கும் நத்தைகளாய் சொற்ப உடைமை சுமந்து,
நடைப்பிணங்களாய்த் தொடரும் பாதயாத்திரையில்
கண்ணீரும், கவலையும், பசியும், பட்டினியும் சொந்தம்.

வீடு வாசல்கள் துறந்து , அடிமைகளாய்த் துக்கித்து
தொடரும் கட்டாயப் பாதயாத்திரையில் துயரம் தவிர
புனிதம் ஏதுமில்லை, அஞ்சி நடுங்கி அழுது தொழுதிட
அராஜகம் அரியணையமர்ந்த கொடியநிலை

தேடிய செல்வத்தைப் பூதம் காக்க,
வளரும் பயிரை மழை காக்க
பொட்டையும் பூவையும் தெய்வம் காக்க
காக்க காக்க என மந்திரம் சொல்ல
புள்ளினங்கள் கூடிவாழ்ந்த தோப்பு சூனியமானது.

***இது தீர்த்த யாத்திரையல்ல-கண்ணீர் யாத்திரை.***

சிந்திய இரத்தம் காயவில்லை
வழிந்தோடும் கண்ணீர் வற்றவில்லை
எரிக்கும் தீயும் அணையவில்லை-எறி கணைகளும்
துப்பாக்கிச் சத்தங்களும் ஒயவில்லை

முறிந்த பனைகளும், சாய்ந்த பெருமரங்களும்,
சிதைந்த குடியிருப்புகளும், தூர்ந்த விளைநிலங்களும்,
அழிந்த ஊாகளும் இழப்பைச் சொல்ல,
நத்தைகளாய் ஊர்ந்து, பனியிலும், மழையிலும் நனைந்து,
கொடுவெயிலில் காய்ந்து குந்திக் கிடந்து, குமுறி அழுது
மரநிழலில் தங்கி தொடரும் யாத்திரையில்
விடுதலையில்லை, பாவ விமோசனமில்லை.

கட்டாந்தரையில் படுத்துறங்கி பற்றைகளில் கழிவகற்றி-குளம்
குட்டைகளில் நீர் அருந்தி கண்டதைக், கிடைத்ததை உண்டு
உடல் தளர்ந்து நோயுற, மனம் சலித்து மாண்டவர் புதைத்து,
மீண்டவர் தொடர்ந்திடும் கொடிய-யாத்திரை
வன்னி நிலப்பரப்பில் முடிவுற
மரநிழலில் கூடுகட்டி விழிநீர்பந்தலிட்ட மானுடம்.

தேடியலைந்த நிம்மதியும் வீடு வாசல் துறந்து
வாடி, வழிநடந்த யாத்திரையில் தொலைந்திட
தேற்றுவாரின்றிக் கூடியழுத சொந்தங்களை
உணவும், மாற்றுடையும்  கொடுத்து
நல்ல சமாரித்தன்களாய் தேற்றிய திருத்தந்தையர்

உறவு சொல்ல யாருமின்றி -ஒரு மரநிழலில்
தனியே புலம்பி நிற்கும் மூதாட்டியை கண்டு
உணவும் நீரும் கொடுத்து-பரிவோடு
உண்ணுங்கள் அம்மா என்றார்.

***"எந்த கீழ்சாதி சமைத்த உணவோ இது எனக்கு வேண்டாம்"***
அனலால் சுடுபட்டு, அமிலத்தில் விழுந்த துயரை
நெஞ்சம் அனுபவிக்க -மாறாத "சாதியக் கொடுமை கண்டு"
மனம் நொந்த துக்கித்த அருட் தந்தை அம்புறோஸ்

சொத்திழந்து, சுகமிழந்து, சொந்த பந்தமிழந்து,
வாழ்விழந்து, ஊர் பிரிந்து, மரநிழலில் கூடுகட்டி
கட்டாந்தரையில் உறங்கியபோதும்-சாதியம்
பேசும் மானுடம், சகோதரரை முதிர்ந்த வயதிலும்
இழிந்த சாதியாய் வதைத்து வாட்டும் மாறாத பேய்க்குணம்

சாதியத்தால் சகோதரரை அடிமையாக்கி-ஆயுதத்தால்
சிங்களத்தை வெற்றி கொள்ளவோ-சிந்திய இரத்தம்?
விதைத்தோர் அறுத்தார், வதைத்தோர் அழிந்தார்
பகிர்ந்தோர் பன்மடங்கு பலன் அடைந்தார்
சாதியத்தால் விதுரர் வில்லை முறித்தார்
சத்தியத்தால் பாண்டவர் வெற்றி பெற்றார்.

மானுடக் குருதி எல்லாம் மாறாத சிகப்பு நிறமே,
தாய்ப்பால் எல்லாம் வெண்மையே தூய்மையின் வடிவே
எங்கும் நிறைந்த இறைவனின் அருள் வரமே,
கண்ணீரில், குருதியில் சாதிய நோயில்லை,
இன, மத, நிற, மொழி பேதங்களில்லை-மானுடமே,
மனிதத்தை பழிக்கும் சாதியம் எதற்கு?
மனிதர்களே நீங்களும் இறை மக்களே
இயேசுவின் சகோதரரே

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-11-05-23
*This is a true story told by Rev. Fr.Ambrose*

# வன்னி யாத்திரை

---

விந்தி, விந்தி நடந்து-நிர்ச்சிந்தையாய்-கூனல் முதுகில்
குந்தியிருக்கும் கொள்ளுப் பேரனை-தொட்டுத் தடவி
நெஞ்சுற்ற சோகம் ஆற்றி, கொட்டும் மழையில் குளித்து-
குண்டுகள் மூட்டும் கோரத் தீயில் குளிர் காய்ந்து
சிதைந்த உடல்களும், இடிந்த மனைகளும்
எம் சொத்து, எம் சொந்தம் என உறவு சொல்ல
மூழ்கடிக்கும் சோகவெள்ளம்-நெஞ்சைக் கொல்ல
விதியை நொந்து நடந்தார்-முந்தி ஒருநாள்
குண்டடிபட்டு நொண்டியான தாத்தா

முறிந்த பனைகளில் காலாற அமர்ந்து களைப்பாற்றி
விம்மி, விழிக்கரையுடைத்து கண்ணீர் வெள்ளம் விரைந்தோட
வாய்விட்டழுது -சொத்தென்றும் சொந்தமென்றும்
சுதந்திரமென்றும் சொல்லியழ சோர்ந்து கிடந்த பேரனை
நெஞ்சோடு அள்ளியணைத்து-விந்தி விந்தி-விதியை
நொந்து நடந்த மூத்த தலைமுறையின் மிஞ்சிய எச்சம்.

கொட்டும் மழையில் அகோர யுத்தம் துரத்திட
கூடு தாங்கி ஊரும் நத்தைகள்போல் சொந்த, பந்தச்
சுமைகள் தாங்கி ஊர்ந்து சோர்ந்த மனித நத்தைகள்

குடைசாய்ந்த வண்டிகளும், விடை சொன்ன உறவுகளும்
தெருவில் நாறிக்கிடந்திட-மடையுடைத்த வெள்ளமாய்க்-கண்ணீர்
விழிக்கரையுடைத்தோட-நெஞ்சில் விம்மலும் அழுகையும்
பொங்கும் எரிமலையாக -கல்லான  இதயத்தோடு
முள்ளான பாதையில் தலை கவிழ்ந்து நடக்கின்றார்

முடமாகிப் போன பனைகளும், விடமாகிப்போன நீர்நிலைகளும்
பிணமான பெருநிதிச் சொந்தங்களும் நிஜமாய்த் திரும்பி வராதோ
ஏக்கத்தோடும் ஏழுமலைகளின் சோகத்தோடும் வன்னி நோக்கி
நடக்கும் வாயில்லாப் பூச்சிகளான யாழ் மக்கள்

இது திருத்தலம் நோக்கிய-புனித யாத்திரையல்ல
உயிர்க்கலம் காத்திட ஊர்விட்டு காடேகும்
உறவுகளின் கண்ணீர் யாத்திரை

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-2-4.2023*

# வரலாறு

---

உரிமைக்கான அறவழிப்போராட்டங்கள் வன்முறையால் நசுங்கி
இனக்கலவரங்களால் ஒடுக்கப்பட, எரிக்கப்பட்ட உயிர்கள்
உடைமைகள், உரிமைக் குரலை நெரித்து, தமிழனை அச்சுறுத்த
இயற்றப்பட்ட பயங்கரவாத தடுப்புச் சட்டங்கள்

கப்பம், காணமல் போதல், ஆட்கடத்தல்கல்
வெள்ளை வான் திருவிளையாடல்கள், எரியும்
டயர்களில்-இளைஞர் ஆகுதியாக-அசுரவேள்விகள்

எரிநெருப்பில் அச்சக் குளிர்காய்ந்து, வடியும் கண்ணீரில்-
இதயச் சோகம் கரைத்து, குருதியால் செந்தூரத் திலகமிட்டு
ஆடுகளம் நோக்கிப்-போராட விழைந்த
இளையதலைமுறையினர்.

அறிவுத்தாக்கத்தை அணைக்க எரித்த யாழ்நூலகம்
இமயச்சோகம் மறையமுன்-நந்திக்கடலில்
மூழ்கிப்போன எம் தாயகக் கனவுகள்

தமிழ் அரசியல் கைதிகள் சிறைகளில் வாடிட
கட்சி மாறிய போராளிகள் சிறகடித்து
சுதந்திரமாய் பறந்திட-ஜனாதிபதியின்
சர்வாதிகார உத்தரவுகள்

சிந்திய குருதி காயமுன்-மண்ணின் தணல் ஆறுமுன்
கண்ணீர் காயமுன், கருகிப்போன விடுதலைக் கனவு
எதிர்காலத் தலைமுறைக்கு-தமிழன் வீரவரலாறை
மறைக்கும், இனவாத அரசின் ஒடுக்குமுறைகள்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-22-08-2013

# வசந்த காலத்தை நோக்கி

---



அடிமை நுகம் இரும்பாய்க் கழுத்தை இறுக்கிட
ஆண்ட பரம்பரையை அடிமையாக்கி கொடுமை செய்யும்
சிங்களப் பேரினவாத அரசு, அடிமைத் தளையை உடைத்தெறிந்து
ஆண்ட பரம்பரை மீண்டும் அரியணை அமர்ந்திட
ஈழத்தமிழன் கொட்டிடும் போர்முரசு



எமக்கென நாம் உரிமை கொண்டாடத் தாய் நாடொன்றில்லை,-
தஞ்சமளித்து நெஞ்சம் மகிழ்விக்க தாயோ, தந்தையோ
கூட வேறெந்த சொந்தமுமில்லை, எம்மைக் காத்திட
எந்தக் கடவுளுமில்லை, நாம் அநாதைகளானோம்-நித்தம்
நெஞ்சில் செந்நீர் சிந்தியழும் வேதனை நிலைகளுமானோம்

நீட்டி நிமிர்ந்து உறங்கிய நாட்களும்,
உண்டு சுவைத்து சொந்தம் கூட்டிய பொழுதுகளும்
கனவுகளாய் கழிந்து போனதற்கு-இன்று
இடிந்த இல்லங்களும், மடிந்த சொந்தங்களும்
சாட்சிகளான இருண்ட காலமிது

விடிவேயில்லாத இருளில்-மின்னலாய்
விடுதலைப் போரின் தொடக்கங்களுமிங்கே.
ஆயுதக் கலாச்சாரத்தால் அகிம்சைச் சூரியன்களின்
திடீர் அஸ்தமனங்களுமிங்கே.

ஆயுதப்போராட்டம் கீதா உபதேசமாக
பஞ்ச சீலமும்-பத்து கட்டளைகளும் பழம் வேதங்களாக
யுத்தப் பாதையெங்கும் இரத்தச் சுவடுகள்
ஓயாது முழங்கம் யுத்தப் பேரிகைகள்

தேச ஒற்றுமையைச் சீர்குலைத்த பேரினவாதம்
சீவர ஆடையைச் சிவப்பாக்கிட-தமிழ்
இரத்தம் கேட்கும் பௌத்த மதவாதம்
தொடரும் யுத்தம், ஓயாத ஒப்பாரியின் சத்தம்

விம்மலும், ஒப்பாரியும், விழிநீர் கங்கையும்
பெருவெள்ளமாய் வாட்டிட-வாழிடங்களை
எறிகணைகளும், பீரங்கிகளும் தீக்கிரையாக்கிட
விழிகளிலே கண்ணீர், இதயத்திலே முகாரி

காணாமற்போன உறவுகளுக்கு
கண்ணீர் தவமியற்றும் தாய்குலங்களும்
கைமை பூண்ட இளம் விதவைகளும்
யுத்தத்தின் சாட்சிகளாக மனதிலே முகாரி

தாலாட்டி துாங்கவைத்த-இளந்தலைமுறையை ஒப்பாரியில்
விழிக்க வைக்க-ஓயாது முயலும் மூத்த தலைமுறையின்
சோகங்கள், கற்பினைக் காக்க -அக்கினியில் சங்கமிக்கும்
கன்னியரின் கற்பூரத் தீபாவளிகள்

ஆறுதல் சொல்லிய சொந்தங்களோ
அங்கங்கள் சிதறி மாண்டன
அன்பு உலாவிய இல்லங்களோ-தீயுண்டு
பேய்கள் உலாவிடச் சுடுகாடய் மாறின



கைதிகளான அப்பாவிகளோ
பூஸா, வெலிக்கடைச் சிறைகளில் வாடிட
குண்டுகள் துளைத்த உடலங்களோ
எரியும் டயர்களில் தகனப்பலியாயின

வங்கக் கடலும் சிந்திய குருதியால் சிவந்திட
பாக்கு நீரிணையும் எம்மவர் கண்ணீரால் கரித்திட
உலககெங்கும் புலம் பெயர்ந்த தமிழ் அகதிகள்
அநாதை, விதவைகளாய் மாறும் அப்பாவிகள்

விம்மி மனம் சோர, விழிகளில் கங்கை பாய
அம்மா என மனம் கதற-அழிந்த சொந்த பந்தம்
குண்டு வீச்சால் நொந்த ஆலயத்தில் -புகலிடம் தேடும்
அகதிகளாய் நானும் கர்ப்பிணி மனைவியும்

எம் உரிமை முழக்கங்கள் குரல் நெரிபட்டு ஓய்ந்திட-ஈழக் கனவு
குண்டுத் தீயில் கருகிட, அச்சம் ஒழிந்த உணர்வோடும், அடிபட்டு
நொருங்கிய இதயத்தோடும், செந்நீர்ச் சேற்றில் சுதந்திர வித்தாய்
எம்மவர் வித்துடல்களை விதைத்து, ஈழ விடுதலையின்
புதிய அறுவடைக்காய் நாம் காத்திருக்கின்றோம்.

எங்கோ தெரியும் விடிவுகால ஒளியில் என்னவள் கருப்பையில்
உயிராகித் துடிக்கும் எந்தன் சந்ததியெனும் நம்பிக்கை ஒளியோடு
இறந்தகாலமும், நிகழ்காலமும் இருளிற்கழிய, எதிர்கால ஒளி பார்த்து-
அது கருவாகி உருக்கொண்டு வரும் வழி பார்த்து, கரும் புகை மறைத்த
வானில் விழி நோக விளி தேடி விடிவுகால ஒளியெனும்
வசந்தத்தை நோக்கி நாம் மூவர் காத்திருக்கின்றோம்.

எமக்கென தாய்நாடு உருவாகும் என்றோர் உள்ளத் துடிப்பில்
உயிர் காத்து, உருவான கரு காத்து, கரு வளரும் மனைகாத்து,
குண்டுவீச்சால் நொந்து நிற்கும் ஆலயத்தில் அகதிகளாய்
ஏக்கமோடும்  எதிர்காலத் தலைமுறையின் தொடக்கமோடும்,
என்றோ உருவாகும் தாய்நாடெனும்
வசந்தகாலத்தை நோக்கி நாம் காத்திருக்கின்றோம்.

*ஈழக்கனவினை எம் ஈரக்கருவிழிகள்*
*களிப்புறக் காணுமுன்-மூடித்துயிலுறுமோ*
*எம் உடல்தான் பேச்சடங்கி மூச்சடங்கி*
*பிணமாய் வாடித்துயருறுமோ?*

யுத்தப் பறைகள் ஓய்ந்திட-இரத்த ஆறுகள் வற்றிக் காய்ந்திட
ஓர் நாள் எமக்கும் மலரும் சுதந்திரம்-தமிழ் ஈழமே தாரக மந்திரம்
இருள் சூழ்ந்த எம் வாழ்வில்-புலிகளின் ஈகைச் சுடர்கள்
வழிகாட்டும் சூரியன்களோ? சோகத் தீ மூட்டும் சொந்தங்களோ
காலமே நீ சொல்!

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
Pax Ravichandra-1977-2808-2023

# வயல் வெளி மலர்கள்

---

எங்கள் வயல்களில் களைகள் படர்ந்திட,
வாடிக் கருகிய பசும் புல்வெளி மலர்கள்
உழவும், மண்வெட்டிகளும் துருப்பிடித்திட
கன்றைத் தேடி ஏக்கத்தோடு கதறிடும் பசுக்கள்

சேவல்கள் கூவ மறந்து சோர்ந்திட
குயில்கள் பாட மறுத்து கேவிக் கரைந்திட
பூசையும், விளக்குமின்றிப் பாழ்படும்
குண்டடிபட்டு நொந்த கோயில்

கண்ணீர்த் தவமியற்றும் ஊரில் ஓயாத ஒப்பாரி
கலைந்த மஞ்சள், குங்குமத்தில் அறுந்த தாலிகள்
இழவு வீட்டில் கண்ணீரும் ஒப்பாரியும் உறவு சொல்ல வந்திட
ஊளையிட்டு அழுதிடும் எங்கள் நாய்கள்

ஈரம் காயாத புதைகுழிகளும்-கரியான டயர்களில்
பலியானவன் நீறும் யுத்தத்தின் கோரம் சொல்லிட
பூனை உறங்கும் சமையல் கட்டில் சுதந்திரமாய்
விளையாடும் சுண்டெலிகள்-ஓயாது
தொலைவில் கேவும் கோட்டானின் குரல் ஒலிகள்

களைகள் வளர்ந்து காடு படர
கறையான் புற்றும், காளான்களும் நாளும் மலர
வீட்டு வேலிகளில் ஓநாண்கள் விளையாட
கோயில்களில் குடிவந்த வௌவால்கள்

வானிலே யுத்த மேகங்கள் வட்டமிட
கோயிலைப் பார்த்து கும்பிடும் மூதாட்டி
ஊர்ந்து வரும் வண்ணப்பூச்சியை பிடித்திட
கூப்பிய கையோடு பிராத்திக்கும் கும்பிடு பூச்சி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-11-06.2023*

# வீரம் விளைநிலம்

---

சுட்ட பொன்னும் சாம்பலாகும்-கொடுந் தீயில்
நெட்ட நெடுமரமும் நலிந்தழியும்-புயற்காற்றில்
கொடும் பாம்பும் நடுங்கிக் குழியொடுங்கும்-பேரிடியில்
கத்தும் கடலோ அலை விரித்து களிநடனம் புரியும்-
கடற்புலியின் வீரச்சமரில்

சடைதரித்த பெருமுனியும் மனம் குழைவார்-மங்கையர் பேரழகில்
விடம் தரித்த வேங்கையோ குண்டு மழையிலும் மனங்குழையார்
அடம் பிடித்தே போராடுவார்-அடக்குமுறை ஓயும்வரை
தாயகத்தை ஆக்கிரமித்த எதிரி- எல்லை தாண்டி ஓடும்வரை.

அஞ்சாது போராடியவர் அமைதியில்  உறங்குகிறார்
நெஞ்சே கலங்காதே, விழி நீரே கரையாதே
உறுதியின் உறைவிடமிவை-தமிழ் ஈழத்தின்
வீரம் விளையும் புதிய விளை நிலமிவை.

விடுதலையின் விளைநிலமிது-விம்மல்கள் தேவையில்லை
சுடுநெருப்பின் செங்கனலிவை-சுடர்கள் தேவையில்லை
புத்துயிர்ப்பின் கருவறையிவை-கல்லறைகள் தேவையில்லை
நித்தியத்தின் நினைவாலயமிது-மந்திரங்கள் தேவையில்லை
தியாகத்தின் திருக்கோயிலிது-தெய்வங்கள் தேவையில்லை

உயிர்மூச்சின் நர்த்தனபூமியிது-
உருத்திர தாண்டவங்கள் தேவையில்லை
கர்மவீரர் துயிலிடங்களிவைதாலாட்டுத் தேவையில்லை
***தர்ம யுத்தத்தில் இறப்புகளில்லை***
***என்றும் புதிய விதைப்புக்கள்தான்***

வெஞ்சிறையில் இட்டு  வதைத்தாலும்,
கொடுநஞ்சினை குடிக்க கொடுத்தாலும்-அஞ்சுதலில்லை
அக்கினியில் எரித்தாலும்அங்கம் சிதைய வதைத்தாலும்
ஆருயிர்த் தமிழை மறப்பதற்கில்லை

என்னுயிர் மறக்குமோ? இன்பத்தமிழை
உயிர் மூச்சாய் உலாவும் தமிழை
உள்ளோடும் குருதியாய் வாழும் தமிழை
என்னுயிர்  ஒருபோதும் மறவாது, மறவாது

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-1-4.2023*

# வெள்ளைக் கொடியும் குருதிக் கறையும்

---

வீர மரணத்தோடு நடைபோடும் மறவர் மானம்
வீழ்ந்தாலும் எழத்துடிக்கும் தமிழர் வீரம்
தாழ்ந்து பணியுமோ?-அடிமையாய் வாழ்ந்து மடியுமோ?

வாழ்ந்தால் தமிழ் ஈழம், வீழ்ந்தால் வீரசொர்க்கம் என்றே
போரிட்டு மடிந்தோம், சுடுகாடாய் ஊர் மாறிட
கண்ணீர் தவக்கோலத்தில் தாய்குலம்  உருமாறிட
எரியும் டயர்களில்-கருகிப்போன இளைய தலைமுறைகள்

இளைஞர் உயிர் தியாகத்தில் தலைவர்கள் வாழ்ந்திட
கொலைகளும் வீரம் எனப் புகழ் பெற-யுத்தமே
அமைதிக்கு வழி என்றான அவலச் சித்தாந்தம்

மண், பெண்ணிற்காய் நடந்த பெரு யுத்தங்கள்
வென்றவரை புகழ்ந்து வீழ்ந்தவளை மறந்து எழுதிய வரலாறுகள்
ஹெலனுக்காய் வீழ்ந்த ட்ரோய், சீதைக்காய் எரிந்த இலங்கை
வென்றவருக்கு நாடு, வீழ்ந்தவருக்கு வீர சொர்க்கமோ கீதை

மணிமுடிகளுக்காய் மடிந்த மாவீரர்கள்-எரிந்து சிதைந்த
எண்ணற்ற இராஜ்சியங்கள், இலட்சோப லட்சம் விதவைகள்
கொடிது! கொடிது! உயிர் கொல்லும் யுத்தம் கொடிது.

கோர யுத்தங்களும், கொடிய பயங்கரவாதமும் உலகை அச்சுறுத்த
மானுட விழுமியங்கள் சிதைந்திட, நாளும் வளரும் வன்முறைகள்.
அமைதி வேண்டும், அனைவரும் வாழ ஆனந்த சாந்தி வேண்டும்
ஒன்றே குலம் ஒருவனே தேவன் ஓங்கிடும் வாழ்வு நிலைக்க வேண்டும்.

குருதி எழுதிய வரலாற்றில் வெள்ளைக் கொடியினும்
கொல்லப்பட்ட அமைதிப்புறாவின் குருதிக் கறை
அன்பின் வழி நடந்தால் அனைவரும் இறைவனின் பிள்ளைகள்
நம்மை அறிவதே மெய் அறிவு-எதிரியை அல்ல
நம் ஆணவ மனதை வெல்வது பெரு வெற்றி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-11-06.2023

# வெண் புறா

---

ஒன்றுபட்டு வாழ்வோம்
உரிமைகளைப் பகிர்ந்து ஆள்வோம்
பிரிவினை எதற்கு?, போராட்டம் எதற்கு?
சிந்திய இரத்தத்தால் சாதித்தது ஏதுமில்லை
இனியும் இரத்தம் சிந்திடத் தேவையுமில்லை

தெற்கிலிருந்து வடக்கிற்கு
சமாதானத் தூதுவனாய் வந்தது- வெண்புறா

கோயில்களும், குடிமனைகளும், குண்டுகளால் நோயுற்றிருக்க,
வானுயர்ந்த பனைகளும், தென்னைகளும்-கூன் விழுந்து
காவலரண் தூண்களாய் வாடிக்கிடக்க
ஓய்வுகொள்ள ஓரிடமின்றி-ஒரு மரமின்றி
இறக்கைகள் வலிக்க- இடம் தேடியது
களைப்புற்ற வெண்புறா

களைத்த இறக்கைகளோ கெஞ்சிட,
முளைத்த தாகமோ நெஞ்சை வாட்டிட,
முறிந்த பனையில்-சற்று
ஓய்ந்து அமர்ந்தது வெண்புறா

வெண்புறா காண வீதியெங்கும் மக்கள் வெள்ளம்
தூது சென்ற புறாவால் பீதியுற்ற சிங்களம்
நாதியற்ற தமிழனை அடக்க- வடக்கில்
இராணுவத்தை ஏவியது.

விஷமிகளின் சதியால் -அஞ்சிப் பறந்த
புறாவின் நெஞ்சைஅக்கினி குண்டுகள் துளைத்திட
மீண்டும் யுத்தமென்றே-சிங்கள
துப்பாக்கிகள்  ஆரவாரக் கோஷமிட்டன.

**ஈழ பூமியெங்கும்-குருதிக் கோலங்கள்**

குருதி தோய்ந்த சிறகுகள் காற்றில் மிதந்திட
குண்டு துளைத் உடல் கடலில் விழுந்திட
சுவையான விருந்தென்று சுவைத்த இறைச்சியை
சுறாக்கள் கொண்டாடிட-சமாதான விருதிற்காய்
சிங்களத்தை பரிந்துரைத்த வல்லரசுக்கள்.

சிகப்பு கவிதையொன்றை
மண்ணில் விழுந்த போராளிக்காய்
கண்ணீர் மல்கிட எழுதினான் கவிஞன்

ஏர்கள் கீறினால் மண்ணிற்கு வருத்தமல்ல
வேர்களின் கீறல் மண்ணிற்குப் புண்ணுமல்ல
மண்ணில் புதைந்தாலும் விதையாய் எழுவோம்
வீர மரணம் வீரனுக்கு சாவல்ல வாழ்வே

அடக்கு முறைக்கு அஞ்சுமோ-
விடுதலை வேங்கையின் வீறு
வன்முறை வேலிக்குள் ஒடுங்குமோ
எரிமலையின் செந்தணல் ஆறு.

***விழுந்த கனிகள்தான் நாளைய விருட்சங்கள்***
***விழுவது விதைப்பேயன்றி-புதைப்பு அல்ல***
***எழுவாய் தமிழா-அடிமை இருள் அகல***
***உதய ஞாயிறு என ஒளிர்வாய்.***

அஸ்தமனம் பூமிக்கே-சூரியனுக்கல்ல
அழுகையும், கண்ணீரும் கோழைக்கே-வீரனுக்கல்ல
வான் மதி தேய்வதில்லை சார்பு நிலை உண்மையே
விதை மடிவதில்லை முளைப்பதற்கே விதைப்பு

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra

# வெள்ளி முளைக்காத நள்ளிரவு

---

வெள்ளி முளைக்காத நள்ளிரவு நேரம்
வீடுகளிலும், வீதிகளிலும் உறங்கிக்கிடந்த நாய்களும்
விழித்துக்கிடந்த தெரு விளக்குகளும்
இனம்புரியாத அச்சத்தில் மூழ்கிக்கிடந்த காலம்

சீருடையணிந்த இராணுவத்தின் கோர முகமும்
நெருப்பை கக்கும் துப்பாக்கிகளும் கனவில் அச்சுறுத்த-
ஊளையிட்டு அழுத நாய்கள்
அறியாமல் ஒழுகி வடியும் சிறுநீர் உடலை நனைத்திட
கால்களுக்கிடையே வால்களை ஒடுக்கி
“நாங்கள் தமிழரும் இல்லை, விடுதலைப் புலிகளும் இல்லை”
பயத்தில் தம்முள் முனகின

விழித்துக் கிடந்த மின் விளக்குகள் களைத்துத் தூங்கிட
அமுலுக்கு வந்த “கட்டாய மின் துண்டிப்பு”
ஓசையின்றி ஒளியின்றி ஊர்ந்து வந்த கவசவாகனங்கள்
ஊரைச்சுற்றி வியூகம் வகித்திட ஊரும் துண்டிப்பு

சிறகொடிந்த பறவைகளாய்ச் சிலந்திவலையில் சிக்கிய
பட்டாம்பூச்சிகளாய் -இராணுவ சுற்றிவளைப்பில்
அப்பாவி மானுடம்-விடியலில் ஒலிபரப்பியில்
ஆலய முன்றலில் ஒன்று சேருமாறு கடுமையான உத்தரவு

உடுத்த ஆடைகளோடும் ஒளியிழந்த முகத்தோடும்
கால் நடைகளாய் ஆலயமுன்றலில் கூடிட-புலிகளை
வடிகட்டும் “முகமூடிப்-பரிசோதனை”
அப்பாவிகளுக்கு மரண வேதனை

முன்னாள் போராளிகள் இந்நாள் “முகமூடிகள்”
மானுடத்தை வடிகட்டிக் காட்டிக் கொடுத்திட
இன்றும் எட்டப்பன் வாழும் துயரம்
அப்பாவி மானுடமோ நிர்க்கதியான அவலம்

“பிரிக்கப்பட்ட மானுடத்தை” “புலிப்பயங்கரவாதிகள்”
எனப் பழிக்கப்பட்ட ஓரினத்தை சிறையெடுத்த இராணுவம்.

நிலவு தூங்கும் இரவில் -கூகைகளும் கோட்டான்களும்
விழித்துக்கிடந்திட -சாமக்கோழி ஊமையானது-
நாய்கள் கோரக்கனவில் நடுங்கி உறங்கிட
இருளில் கிடந்த சிறைச்சாலையின்
இரும்புக் கதவுகள் கிறீச்சிட்டு திறந்தன

கண்களும்-கைகளும் கட்டப்பட்ட கைதிகள்
இராணுவ வண்டியில் ஏற்றப்பட- பாம்புகளாய்
ஊர்ந்து ஊரைக் கடந்த படையணி

நள்ளிரவில் பொட்டல் வெளியில்
இரத்தக் காட்டேரிகளுக்கு நரபலிகள்
கழுகுகளுக்கு சுட்ட பிணம் விருந்தாக
இராணுவத்தின் திருவிழாக்கள்

எரியும் டயர்கள் வேள்விக் குண்டமாக
உருகும் உடல்களோ-ஆகுதீயாகிட
இரத்தகாடடேறிகளுக்கு இராணுவத்தின் அசுர யாகம்

காளைகளும்-கன்னியரும் மழலையோடு அன்னையரும்
மாலையிட்ட புருஷர்களும் வரிசையில் நின்றிட
அக்கினி துப்பிடும் துப்பாக்கிகள் அசிங்கமாய் ஓசையிட்டு
கால் முட்டிகளைத் உடைத்திட முடமாகி வீழ்ந்த மானுடம்
தீமாலை சூடி பிணமாகி பிடிச்சாம்பலாய் உருமாறிட
எரியும் டயர்களை அக்கினி மாலைகளாய் சூட்டி
ஆர்ப்பரித்த சிங்கள இராணுவம்.

உயிரை தீய்க்கும் தீயைத் தாண்டி
உரத்து ஒலித்த அவலக் குரல்களால்
கல்லான தெய்வங்கள் விழிக்கவில்லை
கண்ணீர்த் தவமிருந்த உறவுகளோ உறங்கவில்லை.

தெய்வங்கள் கனவிலும் நாய்களின் பயங்கர கனவோ?
இல்லை நரபலி உண்ட ஆனந்தக் களைப்போ?
ஆகுதியாய் வீழும் குற்றுயிரான உடல்கள்
அசுரயாகம் செய்யும் இராணுவத்தால்
அமரலோகம் செல்லும் ஆன்மாக்கள்?

விடியலில்-ஊரைக் கூட்டிய அழுகையொலிகளும்
ஊளையிட்டு அழுத நாய்களும் -சாம்பலாய்
உருமாறிய உறவுகளின் சொந்தம் சொல்ல
விடுதலை வரலாற்றில் நடந்த அவலம்
பி.பி.சீ செய்தியான துயரம்

சாம்பலாய்ச் மாறிய மனிதம்
கண்ணீர் பூக்களுக்குள்
கலையாத விடுதலை கனவின் சரிதம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-29.3.2023

# வேண்டுதல்

---

எங்கள் அன்னையர் வயிற்றில் தீ மூட்டினார்
தந்தையர் நெஞ்சங்களில் கூர் வாளைச் சொருகினார்
அக்கா-தங்கை விதவைகளாய் மாறிட
தாலி உறவுகளை அறுத்தார்

தெருவெங்கும் டயர் எரிய-தேசமெங்கும் பிணம் மணக்க
அப்பாவி உறவுகளை உயிரோடு வதைத்து
எரிநெருப்பில் சிதைத்தார்

தெருவெங்கும் தேகங்களின் திருநீறு
ஊரெங்கும் உறவுகளின்-கண்ணீர் ஆறு

எரியும் டயர்களில் இளைஞர்களின் சடலங்கள்
ஈழவிடுதலையை அழிக்க-ஊரெங்கும்
இராணுவமிட்ட அழியாத கோலங்கள்

நன்றி மறவா நாய்களும் சோகத்தால் ஊளையிட
சொந்த பந்தங்கள் சோகத்தில் மூழ்கிட
பேய்களாய் எமை வாட்டிய அங்குலிமாலாக்களை
குணமளித்து வாழவைப்பாய் புத்த பெருமானே

***அன்பே சிவம்-வாழ்வே தவம்***
*Pax Ravichandra-26.3.2023*

# வேங்கையின் காதலி

---

நீலக்கயல்விழிகள் என் நெஞ்சில் எழுதிய
காதல் கவிதைகள்-செவ்வாயிதழ்கள்
செப்பிய மொழிகளால் -இன்று
சுவையிழந்து பொய்யாகிப் போனதேனோ?

நாணமும், மோகனப் புன்னகையும் நல்லணியாக
நெஞ்சுக்குள் காதல் வானாய் விரிந்தவள்
நல்லாள், நான் விரும்பும் பெண்ணாள்
சொல்லாள் சுட்டென்னைச் சோதித்ததேனோ?

கல்லும் கனியாகும் தேன்மெழியாள் வாய்மொழிகள்-இன்று
கனலாகி, முள்ளாகி நெஞ்சில் தைத்திட
மடியும் களம் வேண்டாம்- மலரும் காதல் வரம் வேண்டும்
மறுக்காமல் வரம் தர வேண்டும் என்றாள்

கோபத்தில் என் முகம் சிவக்க-விரக தாபத்தால் வாடிய மலர்
கண்மலரில் வெண்முத்தாய் கோர்த்த கண்ணீர் மாலையும்
பொன்மார்பில் அலைஅலையாய் எழும் விம்மல்களும்
கூப்பிய கைமலரோடும், கெஞ்சும் விழிகளோடும்
செப்பிய மொழி பொறுப்பீர் என்றாள்-
போர்க்களம் செல்ல-தடையேதும் சொல்லேன் என்றாள்

மெல்லிடையாள் வேங்கையின் காதலியாள்
உயிராய் என்னை காதலித்து
உயிர்க்காற்றாய் எனை சுவாசிக்கும்
என்னவள் - தமிழீழப் பெண்ணவள்

## வெண்மேகம்

விண்ணில் அலையும் மேகமெல்லாம்
புகலிடம் தேடி- புலம்பெயர்ந்த ஈழத்தமிழர்களோ?
மண்ணில் காணும் ஈரமெல்லாம்
அவர்கள் சிந்திய கண்ணீர்த் துளிகளோ?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-31.3.2023

# வேங்கையின் மைந்தன்

---



விண்ணும் மண்ணும் வீசு தென்றலும் வாசப் பூக்களும் தீப்பிடித்திட
உணவின்றி வாடி நின்ற வண்ணத்துப்பூச்சிகள்
உறவின்றிக் கூவியழைத்து கேவியழுதது
துணையை காணாமல் ஒற்றை கோகிலம்

தென்னைகள் தீப்பிடிக்க-பனைகள் கருகி முறிந்திட
வாழிடமும் சுடுகாடும் ஒன்றாய் தீக்குளித்திட
போராடும் விடுதலைப் புலிகள்

மீனினமும்-வாழும் நீர்நிலை சுடுவதென்று வருந்திட
காக்கையாய் குயிலாய், கள்ளிச்செடியாய்
முட்புதராய் பிறந்திருந்தால் நலமென்று மானுடம்
மனம் நொந்திட வாழ்வோ கொடுந் துயரான அவலம்

குண்டு துளைத்த உடலங்கள் எங்கும் சிதறிக் கிடக்க
அங்கம் சிதறிய சடலங்கள் நாறி மணக்க-காயம்
பட்ட காயங்கள் மருந்தின்றிப் பழுத்து உரக்க
குருதி நீராடி வாழ்வுக்காய்ப் போராடும் உறவுக்கு
உணவும், மருந்தும், பதுங்கு குழியும் பஞ்சமானது

இடியாய் ஒலியெழுப்பி-தீ மழையாய் விழும் எறிகணைகள்-ஒருபுறம்
எரிமலையாய் குண்டு மழை பொழியும் பீரங்கிகள்-மறுபுறம்
விண் நின்றும் கடல் நின்றும் மண் நின்றும் உயிரழிக்கும் யுத்தம்
தாலியும், தொப்பிள் கொடியும் அறுந்திட ஆறாய் ஓடும் இரத்தம்

வாழிடமேது சுடுகாடேது-திக்கும் திசையும் தெரியாமல்
குண்டுமழை பொழியாத திசைநோக்கி ஓடிடும் மனிதர்கள்.
விழுந்தவர் விழுந்திட, உயிர் பிரிந்தவர் மாண்டிட
ஓடிப்பிழைக்கும் துயர வாழ்வில் ஒப்பாரியும் அழுகையும்
உறவும் துறந்த “ஞான நிலை” மானுடத்திற்கு

அன்னை ஒருபுறம் தந்தை மறபுறம்
அண்ணனும் அக்கையும் யாருமறியாத் திரிபுறம்
உடலங்களே மண்ணை மூடி நிற்க,
மண்ணில் உறங்கிட வழியின்றி சடலங்கள் மணக்க
கண்பட்ட திசையெல்லாம் கூடு கலைந்த தேனிக்களாய்-
எறும்புகளாய் கதறி ஓடும் மானுடம்

உறவாய் -உயிர்காக்கும் கவசமாய் உயிர் மூச்சாய்
'தம்பியின் கட்டளையை' சிரமேற் சுமந்த இரும்பு நெஞ்சங்கள்
இளையவன் பாலசந்திரனை இரும்புக் கவசமாய் காத்திட
இடியாய் ஒலித்து-மழையாய் பொழிந்து
இரும்பு யானைகளாய் உருண்டு வரும் யுத்தத் தாங்கிகள்
கவசம் அழித்து-உறவுகளை கொன்றிட கைதியான சிறுவன்

பிடிபட்டவன்-பாலசந்திரன் வேங்கையின் இளைய மைந்தன்
அடையாளம் கண்டபின் அடையமுடியாத செல்வம்
அடைந்தோமென்றே ஆடிப்பாடிய அங்குலிமாலாக்கள்

அம்மையப்பன் ஏக்கம்தான் சிறு நெஞ்சை வாட்டிட
அழுகை முட்டும் விழிகளுக்குள் ஆயிரமாயிரம் உயிரிழந்த
உறவுகள் வந்து போயிட-தன் நிலையிழந்து கதறும்
நிலையிலும் தந்தையின் வீரம் நினைவுக்கு வர
விடிவு வரும் என்ற நம்பிக்கையோடு விழிகள்
வாசலை நோக்கிட
படமெடுக்கும் பாம்புகள் கொத்துமோ
-குதறி கிழிக்குமோ என்றஞ்சாது-
நிர்ச்சிந்தையாய் சின்னவனும் காத்திருந்தான்

செல்லமாய் வளர்ந்தவன் ஷெல் வீச்சுக்கும்
துப்பாக்கி ஓசைக்கும் பழகிப்போனவன்
வல்லவரும் நல்லவரும் வீழ்வதைப் பார்த்தவன்
வாசல் பார்த்திருந்தான் தன் நேசம் வருமென்று

எல்லாமிழந்த நிலையில் எதிரியின் பதுங்கு குழியில்
இளையவனும் சிறையிருக்க பொல்லாதவரிலும் நல்லோர்
உண்டியும் பானமும் கொடுத்து உபசரிக்க-சின்னவன்
விழிகளும் சிறைமீட்க தந்தை வருவான் என்றே
வழிமேல் விழி வைத்து பாத்திருந்தன.

கண்ணெதிரே தன் மெய்காவலர் உயிரை காலன் பறிக்கக் கண்டான்
நிராயுதபாணிகளாய் சரணடைந்தவரை-இராணுவம்
நிஷ்டூரமாய்க் கொல்லக் கண்டான்
விண்ணின்ற பெருமான் மண்ணால் படைத்த மானுடம்
மண்ணுக்காய் புரியும் அதர்ம யுத்தம் கண்டான்
மனசுக்குள் கேட்கும் மனச்சாட்சியின் புதிய கீதை-
யுத்தத்தின் கொடுமை சொல்லக் கேட்டான்.

ரத்தத்தின் சுவைபார்த்த இராட்சதர்
தன்னுயிரைக் குடித்திட தாகமாய்க் இருக்ககண்டு
அச்சம்தான் நெஞ்சையடைக்கும்
அன்னை மடி தேடி அன்பு நெஞ்சம்தான்
ஒரு கணம் வாடிக் களைக்கும்

யுத்த கொடுமைதான் பிஞ்சு நெஞ்சை சிதைக்கும்
துச்சமாய் உயிரை மதித்துப்போராடும்
தந்தையின் வீர நெஞ்சம்தான் நினைவுக்கு வர
நெஞ்சை நிமிர்த்தி சீறிவரும் குண்டுகளை
பிஞ்சிமார்பும் வாஞ்சையோடு ஏற்கும்

மரணம்தான் நிஜமென்றபின்
மடிவதும் ஒருமுறைதான் என்றறிந்தபின்
மாவீரன் மகனும் வீரனாய் மடிந்தான்
வீர சொர்க்கம்தான் சென்றான்

மாண்ட மழலையர் படையணி மனக்கண் வர
நீண்ட துயரத்தில் நொந்தழும் தாய்களின் கண்ணீர்
நெருப்பாய் நெஞ்சினை சுட-ஆண்ட பரம்பரை கண்ட கனவு
புகையாய் காற்றில் கரைய-ஈன்ற பொன்னாட்டிற்கு
என் உடலும் உரமாகும் உதிரமும் நீராகும்
எண்ணம் மன நிறைவைத் தர
அஞ்சிடாது மடிந்த மாவீரன் மகன்

பொன்மாலையும்-பூமாலையும் போட்டு
அன்னை அழுகு பார்த்த-பூ நெஞ்சை
துப்பாக்கி வேட்டுக்களும் துளைத்தே தேடின
ஈழமண்மீது இவன் கொண்ட காதல் மடிந்ததா?
இல்லை வாழுதா என்று?

ஈழமண்ணை நாளை ஆள இவனும் உரிமை கோரலாம்
தமிழ் ஈழப் புலிக்கொடி தாங்கி இவனும் போராடலாம்
கலைந்து போகும் ஈழக் கனவும் ஒருநாள்
இவனால் நனவாகலாம்
சிங்களமும் செந்தமிழுமாய் நாடு இரண்டாகலாம்
அஞ்சியே -உயிர் மூச்சைத் துண்டித்திட
பிஞ்சி முகம் பாராது நெஞ்சில் சுட்ட கொடியவன்

வேங்கையின் அசல் வித்திது-நாளை வளர்ந்து
நமக்கே யமனாகலாம்
தந்தையின் தமிழ் ஈழக் கனவை நனவாக்கலாம்

உறங்கிக் கிடக்கும் எரிமலையிது-உறக்கம் கலைந்தால்-
நம் வெற்றி பொய்யாய் போகலாம்
ஈழத்தாயகமும் இவனால் ஒரு நாள்-நிஜமாகலாம்

அண்ணனும் மாண்டான்-அஞ்சாத வேங்கையாய்
அன்னையும் அக்காளும் மாண்டனர்
பெருவேங்கையும் தந்தையும்மானவன் வீழ்ந்தான்
இவனும் மாளாதுபோனால்-நாளை மிஞ்சாது
சிங்களம்-என்றஞ்சியே-இளையவனையும்
இல்லாது ஒழித்த பொல்லாதவர்

வேங்கையின் வித்திது-வீரமும் தன்மானமும்
இவர்தம் இணைபிரியா-உரிமைச் சொத்து
நெஞ்சினை குண்டுகள் துளைத்தாலும்
துஞ்சிட நஞ்சு புகட்டினும்
அஞ்சா வேங்கையின்-இளைய வாரிசு இது
வளர்ந்தால்-வேங்கையாகும்-மடிந்தால் நம் கனவு நனவாகும்
கொல்வோம் என்றே சுற்றி வளைத்து கொன்றார்
புதிய அபிமன்யுவை

சிங்களமும் அடிமையாவதா? வாளேந்திய சிங்கமும்
வலுவிழந்துபோவதா? குமுறினான்-நெஞ்சில்
கொலைவெறி பொங்கிட நினைவில் துஞ்சிய
தோழர் முகங்கள் வந்து போயிட-வெறி கொண்டு
யுத்த நெறி தவறிக் கொன்றார் அப்பாவிச் சிறுவனை

துள்ளித் திரிந்த புள்ளிமானொன்று-வேடன்
அம்பு பட்டு விழுந்ததோ? மீளாப் பள்ளி கொள்ள
மலைமகள் கைப்பொருளும் மண்ணில் வீழ்ந்ததே
மாவீரர் வாரிசும் முடிவுக்கு வந்ததோ

ஆயுதமேந்தாதவனை அப்பாவி சிறுவனை
சுட்டுக் கொல்லுதல் நியாயமோ? தர்மமோ?
யுத்த நீதியும் செத்துப்போயிட-தர்மமே
இது தம்மபதத்தில் சொல்லாத தர்மமோ?

நெஞ்சை துளைத்த சிங்களக் குண்டுகளும்
அஞ்சிச் சிவந்தன-நாணிக் களைத்தன
வாடிடும் உயிரினும் வாடாது வாழ்ந்திடும்
மறத்தமிழன் வீரத்தால்

ஆண்ட பரம்பரை மீண்டும் ஒருமுறை
தம் ஆளுமுரிமைக்காய் யாத்த வேள்வியும்
பொய்யாய்-கனவாய் போனதே

வெஞ்சினத்தை செஞ்சந்தனமாய் நெஞ்சில் பூசி
அணையாத சுதந்திரக் கனலை இதயத்தில் மூட்டி
ஆண்ட பரம்பரை மீண்டும் தமை ஆண்டிட
காட்டிலும் மேட்டிலும் போராடினார்

விழுந்தபோன மறவர் உடலை வித்துடலாய் விதைத்து
உயிர்த்து எழுந்திடும் சுதந்திரக் கனவை நெஞ்சில் நிறுத்தி
ஆண்டுகள் பல போராடினோம்-ஒற்றுமை சிதைந்திட
உறவுப்போர்களினால் உருக்குலைந்த விடுதலைப்போராட்டம்

இயக்க மோதல்களால் வலுவிழந்த போராட்டம்
பயங்கரவாதமாய் விகாரம் பெற -தர்மமும் நீதியும் விலகிட
தமிழ் ஈழமும் கைநழுவி கனவாய் பழங்கதையாய் போனதோ?
நம் நிலையும் அடிமையானதே

மண் ஆண்ட மாமன்னரெல்லாம் முடிவில் பிடி சாம்பலாகிட
அன்பினால் இதயங்களை ஆட்கொண்ட மாபுருஷரோ
அன்பு மனங்களில் தெய்வங்களாய் வாழ்ந்திட-மானிடரே
அன்பினால் உலகை ஆளுங்கள்-ஆயுதங்கள் வேண்டாம்
அழிவுறும் யுத்தங்கள் வேண்டாம்

***சத்தியம் தோற்றதில்லை-நீதி அழிந்ததில்லை
தெய்வம் நின்று கொல்லும் என்ற வாக்கு
என்றும் பொய்த்ததில்லை***

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க
எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-30.03.2023*

# வேரும் விழுதும்

---

வேர்களும், விழுதுகளும் அறுந்திட, அந்நிய மண்ணில்
வேரூண்டக் கண்ட, கனவும் கலைந்து போனது?
நீலவானில் இறக்கை விரித்துப் பறக்கத் துடித்த ஆசையும்
ஏழ்மை கத்தரித்த இறகுகளால் முடமானது

இமயச் சுமையால் இதயம் கனத்து, இருவிழிகளிலும்
கங்கை பாய்ந்திட, ஊதாரி மனம் வீடு திரும்பி-உள்ளம்
தந்தையே என் சித்தமன்று  நின் சித்தம்  என்று
சரணடைய, எல்லாம் இன்பமயமானது.

அண்ணனும் தம்பியும் அகாலமாய் மரிக்க
ஆலயங்களில் சாவுமணிகள் விடாது ஒலிக்க
துப்பாக்கி ஒலிகள் அச்சத்தை வளர்க்க-நாளும்
சோகத்தில் எங்கள் விடியல்கள்

அன்னையர், கன்னியர் வாழ்வை யுத்தம் பறிக்க
கண்ணீர் வடித்து விழிகள் சோகத் தீ அணைக்க
அகால மரணம் காணாத வீடில்லை-கடல் கடந்து
தப்பிப் பிழைக்க ஏழைகளுக்கு வழியில்லை

மண் சிவக்கச் சிந்திடும் குருதியும் ஓயவில்லை
மனம் வெந்திட எரிந்திடும் யுத்த நெருப்பும்
அணையவில்லை, விடுதலையும் கலைந்த கனவானது
அழுகையும் புலம்பலும் ஓயாத நிலையானது

முறிந்த பனையும், சரிந்த தென்னையும் சாட்சிகளாக
தென்றலிலும் தீயும் பிணவாடை, தேமதுரத் தமிழன்
வாழ்வோ, ஒப்பாரியும், புலம்பலுமான வற்றிய ஓடை

கைதும், காணாமற்போதலும் நாளும் தொடர
குண்டு மழை உயிரையும், உடைமைகளையும் தீய்க்க
அகதி, அங்கவீனர், விதவை யுத்தம் படைக்கும் சந்ததி
அஞ்சிப் பிழைக்கும் வாழ்வோ நாளும் எமனின் சந்நிதி

சாவின் வழியாய் புதுவாழ்வு என்றால்
எம் வாழ்வும் சிலுவைச் சாவுதானோ?
எம் மீட்பர் நாமேதானோ?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-22-08-2013

# வெற்றி தோல்வி

---

மங்கலம் முழங்க, வேதியர் மந்திரம் ஓத
சுற்றி நின்று புலவர்கள் பரணி பாட
குடியும், படையும் மலர் தூவி வாழ்த்த
வாகை சூடிய வேந்தனோ சக்கரவர்த்தி

மடிந்தவனுக்காய் தாயும், தாரமும் ஒப்பாரி வைத்து புலம்ப
வீழ்ந்தவனுக்கு நடுகல்லைத் தவிர-நினைவுகூர ஏதுமில்லை
மாண்டவனைப் பாட கவிஞனுமில்லை
மடிந்தவனை நினைந்திட்ட வரலாறும் இல்லை

கொல்வதுதான் யுத்த நீதியா? ஒவ்வொரு இறப்பிலும்
பெற்றவள் அழுகின்றாள்-தாலி பெற்றவள் விதவையாகின்றாள்
உயிர்களைக் கொன்று- உடமைகளைச் சூறையாடி
ஊர்களை எரித்து-கழனிகளைக் காடாக்கி
வெற்றிக் கொடி நாட்டுவது வீரமா?

அமைதியைப் பேணி-அனைவரும் வாழ்ந்திட
சமவுரிமை, நீதியை நிலைநாட்டுவது வீரமன்றோ?
ஏனையவை ஆணவத்தின் வடிவமன்றோ?

மண்ணைச் சிவப்பாக்கி மனதைக் கல்லாக்கி
மணிமுடியையைப் பெரிதாக்கி வாழும் உலகில்
விழிகளை நீராட்டி விழுந்தவர்காய் புலம்பியழும்-
தாய்க்குலத்தை தேற்றிட யாருமில்லை

கண்ணீர் துடைத்து, புதுவாழ்வு கொடுத்திட
காவியங்களுமில்லை, புதிய வேதங்களுமில்லை
வீர வரலாறு எங்கும் நாற்றமடிக்கும் பிணவாடை-
நாறி ஓடும் கண்ணீர், செந்நீர் கலந்த ஓடை

கொள்ளைப் பொருளாய் பெண்களை
கொள்ளையிட்ட மன்னர்களும் பேடிகளே
தாய் குலத்தின் எதிரிகளே, யுத்த வெறியர்களே

சுதந்திரப் பிரியர்களும், போர் வெறியர்களால் வீழ்ந்திட
மணல் மேடாய் மாறிய நகரங்கள்
காலத்தில் நில்லாது வீழ்ந்திட்ட வல்லரசுக்கள்
மணி மகுடங்கள், சிம்மாசனங்கள்

எல்லாம் மாறிடும் உலகில் இன்றைய வெற்றி
நாளைய தோல்வியாய் மாறிட
வாழ்வு இறை தந்த பெரும் கொடை
மாண்டபின் இறைவனுக்கு நாம் திருப்பி கொடுத்திட
எம்மிடம் எத்தனை குறை, பாவக் கறை?

மத வெறி, இன வெறி, நிற வெறி, மொழி வெறி,
என வெறிகொண்டவர் வாழும் உலகில்
சத்தியநெறி, சென்றவர் அரிச்சந்திரன் ஒருவரே

பெருமான் புத்தர், இயேசு காட்டிய பாதை
காடாகிப்போனதோ? ஒரு வழிப் பாதையானதோ?
தேசங்கள் யுத்தவெறியில் தீயாகிப்போகுதே
குருஷேத்திரத்தின் சங்கொலி அச்ச மூட்டுதே

பகைமையை பகைமையால் தணிக்க முடியாது
பகைமையை அன்பினால் தணிக்க முடியும்
தொன்று தொட்டு வரும் தர்மம் இதுவே

தூய மனத்தவருக்கே சத்திய தரிசனம்
நல்மனத்தவருக்கே இறை அமைதி
மாறாத இறை நீதியானதே

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-08-06.2023

# வெற்றி விழா

---

வெற்றிக் கம்பத்தில்-வீரவாளேந்திய சிங்கம்
ஊர்ந்து உயர்ந்து பட்டொளி வீசிப் படர்ந்திட,
பீரங்கிகள் துப்பிய குண்டுகளால்-அமைதிப்புறா
அச்சத்தோடு எழுந்து பறந்திட,-விண்ணதிர
மண்ணதிர வீசும் காற்றும் விரையும் கடலுமதிர
முப்படைகளின் அணிவகுப்பு.

கவசவாகனங்களும், கனரக யுத்தத் தாங்கிகளும்
கிபீர் விமானங்களும், யுத்த கப்பல்களும் காட்சியாக
நாட்டுக்கும், நாடாளும் தலைவனுக்கும் ஆசி வேண்டி
பிக்குகளின படையணி ஓதிடும் பிரித் ஒலி
யுத்த பேரிகையாய் முழங்கியது

சீவர ஆடையையும், தேசிய கொடியையும்
சிவப்பாக்கிய தமிழ் இரத்தம்
வடக்கில் -வடக்கிருக்கும் அவலம்.

வெற்றி விழாக் கொண்டாட்டம் களை கட்டிட
சிங்கள முகங்களிலோ வெற்றியின் களிப்பு
தமிழ் மனங்களிலோ-வீழ்ந்த உறவுகளை
நினைக்கவும் முடியாத வேதனையின் தவிப்பு

வீழ்ந்த வீரபுருஷருக்காய்-அரசியல்வாதிகளின்
ஆரவார மௌனாஞ்சலி-விம்மிடும்
ஏழை சிங்கள தாய் முகங்களிலோ
ஓசையின்றி வடியும் கண்ணீர் அஞ்சலி

வீழ்ந்த தமிழ் இனம்-மீண்டும் வீறுகொண்டெழாதிருக்க
எச்சரிக்கையாய்-வாளேந்திய சிங்கத்தில்
இன்றும் காயாத தமிழ் இரத்தம்-பௌத்த
பீடாதிபதிகள் பிரசங்கத்திலோ பேரினவாத சத்தம்

தமிழ் மண்ணெங்கும் சிங்களப் படையின் ஆக்கிரமிப்பு
வேர் விட்டு விழுது விட்டு தொழுது வாழ்ந்த மண்ணில்
உழுது பயிரிட்டு வயிறு வளர்த்த மானுடம்
வாழிடமும் வாழ்வாதாரமும் இழந்து
கண்ணீர்த் தவமிருக்கும் அவலம்- மீண்டும்
ஒரு விடுதலைபோராட்டத்திற்கு வித்தானதோ-?
புது விதைப்பானதோ?

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-29.3.2023*

# விடுதலை

---

அஞ்சி வாழ்ந்ததால் ஆனது ஏதுமில்லை தமிழா
துஞ்சுவது ஒரு முறை வீரர் தம் வாழ்வில்
நஞ்சுதான் தந்தாலும், நமனாய் வந்தாலும்,
அஞ்சித் தஞ்சம் கேளோம் - அடிமைகளாகோம்
வெஞ்சினம் கொண்டே நம் விடுதலை பெரிதென்றோம்

நெஞ்சினில் ஆடும் நஞ்சு மாலை
அஞ்சுவதற்கு அஞ்சுவது அறிவுடமை  எனச்சொல்ல
அஞ்சிடாத மரண விளையாட்டில்
தோள்  சுமக்கும்  ஆயுதங்கள்
ஈழவிடுதலையின் தடையை வெல்ல
விடுதலைப் புலிகளின் வாழ்வும்
கல்வாரிச் சோதனையோ?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
(லோக சமஸ்தா சுகினா பவந்து)
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-31.3.2023

# விடுதலைக் கோஷம்

---

நெருப்பு நிறம் மாறவில்லை-வான் மதியும்
வளர்ந்து தேயும் முறை மாறிக் கொண்டதில்லை
தோன்றி மறையும் சூரியனும்
திசை மாறிக்கொண்டதில்லை

ஒப்பாரியும் புலம்பலும் சுரம் மாறிக்கொண்டதில்லை
கண்ணீரும் சுவை மாறிக்கொண்டதில்லை
சிந்திடும் இரத்தம் நிறம் மாறிக்கொண்டதில்லை

புலிகளின் தாகம் தமிழ் ஈழத் தாயகம்
மாறுமோ ஈழத்தமிழர் எம் தாயக கோஷம்
பூணுமோ எம்மினம்அடிமை வேஷம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-4-4-2023

# விடுதலைப் பறவைகள்

---

யுத்தபூமி சத்தமின்றி ஓய்ந்து கிடந்தது
குண்டுகள் தோண்டிய குருதிக் கிணறுகள்
கோரமாய் சிதைந்து மண்ணில் கிடந்திட
வாடி மெலிந்த வளர்ப்பு நாய்கள்
கூட்டமாய் கூடி நின்று பெருஞ்சோகம் சொல்லி
ஊளையிட்டு அழுதன.

உடற்கூண்டுகள் திறந்து கிடக்க உயிர் பறவையோ பறந்திட
ஆகாய வெளியில் ஆனந்த வட்டமிட்ட பிணந்திண்ணி கழுகுகள்
-விரதம் முடித்து,விருந்துதுண்ண விரைந்து கீழிறங்கின.

ஈழக்கோயிலில் நாளும் நடக்கும் சுதந்திர வேள்வியில்
இன்றைய அவிப் பலியாய் ஓமத்தீயில்
விடுதலைப் பறவைகள்

தேசமெங்கும் தீயெரிந்திட, புலம்பலும், அழுகையும்,
அமைதியைக் கலைத்திட, பிணவாடையால் உயிர் மூச்சும்
புகைவாடையால் சமாதானபேச்சும் திணறிட, நீதி கேட்டு
கண்ணகிகளின் காற்சிலம்புகளே கைக்குண்டுகளாகின
அன்னையரின் பூச்சரங்களே தீச்சரங்களாகின.
-
வான்மதியும் தேய்ந்து மெலிந்தது-
தமிழர் சோகத்தால் -
கங்கைகளும் காய்ந்து வற்றின
அன்னையர் சிந்தும் கண்ணீரால்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
(லோக சமஸ்தா சுகினா பவந்து)
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-31.3.2023

# விழிப்பு

---

கண்ணீர்க் கங்கைகளும், குருதியாறுகளும்-
செந்தமிழர் தாயகத்தை மூழ்கடிக்க -அழுகையும், புலம்பலும்
தமிழினத்தின் தேசிய கீதமாய் எதிரொலிக்க
எரியும் டயர்களிலும், சொரியும் குண்டுகளிலும்
இளைய தலைமுறையின் அக்கினிப் பயணம்-
ஆயுதப்போராட்டத்தால்-தேசமே மயானமான அவலம்.

தூங்கிக் கிடந்த வேங்கையொன்று துயில் கலைந்தெழுந்தது இன்று.
செந்தணலாற்றில் நீராடி, நிதம் செத்து மடியும்
சொந்தங்களின் இரத்தத்தில் தன் முகம் பார்த்து
வெள்ளாடல்ல விரவேங்கையென்றே
தன்னையறிந்த கர்வத்தால் உறுமியது

சோகத்தீயில் தியாகச் சுடராய் எரியும் தாய்மை பார்த்து
ஈகைச் சுடராய் தன்னை எரித்தே
இனவாத யாகத்தை அழித்திட
வீறுகொண்டு எழுந்தது வீரவேங்கை இன்று

அடிமையல்லோம் ஆண்டாண்டுகாலம் தொழுது வாழ்ந்திட,
ஆடுகளல்லோம் பேரினவாத நரிகளுக்கு பலியாகிட -ஏணிப்
படிகளல்லோம் எம் தோள்மேல் இனவாதிகள் ஏறி அமர்ந்திட
எமை நாமாள இறைமைகொண்ட தமிழ் மக்கள நாம்

விடியல் சொல்லும் ஈகைச்சுடர் நாம்
இனவாத அடிமையிருள் எம்மை மறைப்பதோ?
விடுதலை வேட்கை கொண்ட மறவர் நாம்
அடக்குமுறையின் கொடுவடிவங்கள் எம்மை ஆள்வதோ?

***நெருப்பாற்றில் தினம் நீராடும் வேங்கைக்கு***
***யுத்தம் வெறும் விளையாட்டே***
***கத்தி முனையில் நடைபயிலும் குழந்தைக்கு***
***போர்களமும் பூவனமே***

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-31.3.2023*

# விழுப்புண்

---

மண்ணும், மனங்களும் அதிர, ஒலிக்கும் குண்டுச்சத்தங்கள்
பூங்குழல் மண்ணில் புரள, மங்கையரின் சோகங்கள்
மண்ணைச் சிவப்பாக்கும் இரத்தங்கள் காலம் பல கடந்தும்
விழுப்புண்ணாய் நெஞ்சிலே நிலைத்த ஆறாத காயங்கள்.

எரியும் டயரில் பிள்ளைகள் கருகிட, குண்டு மழையில்
ஊர்கள் எரிந்திட, அகதி. விதவை. அநாதை,
அங்கவீனர், யுத்தம் படைக்கும் புதிய சந்ததிகள்.

ஆண்ட பரம்பரை, மீண்டும் ஒரு முறை ஆள நினைத்து
ஏந்திய ஆயுதப் போராட்டம் கலைந்த கனவானது
பாழடைந்த ஊர்களும், காடு மண்டிய கழனிகளும்
விடுதலைப் போராட்டத்தின் விழுப்புண்ணானது

வௌவால் குடியிருக்க, கறையான் புற்றமைக்க,
பாழடையும், ஊர்களும், கோயில்களும்,
காலன் வந்தழைக்க-ஒப்பாரி, புலம்பலோடு
நித்தமும் பாடையில் மரண ஊர்வலங்கள்,

கைமையும், ஏழ்மையும் ஒட்டிப் பிறந்த உறவாக
கொதிக்கும் நெஞ்சுக்குள் கனலாய். கரியாய்,
நினைவாய் மாறிய சொந்தங்கள்-மனதில்
எல்லாம் மாயை என்னும் வேதாந்தங்கள்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-22-08-2013

# விசனம்

---

முப்பதாண்டுகள் ஓயாது -சுதந்திரக் கனல் கக்கிய
புரட்சி எரிமலை ஓய்ந்ததோ?
ஆழ்கடலையும்-உழுதுஆயுதப் பயிர் செய்த
கடற்புலிகளும் மாண்டுபோயினரோ?

ஏழ்கடலையும் நீந்தி கடந்து பெருநெருப்பாய் எழுந்த
செம்புரட்சி அவிந்துபோனதோ?
அண்டம் நடுங்கிட ஆடிய-கரும்புலிகளின்
ருத்திர தாண்டவம் நின்றுபோனதோ?

விடுதலைப் பறவைகள் பாடிய சுதந்திர கீதம்
ஓய்ந்ததோ?, சுந்தர வானில் பறந்த பறவைகள்
சிறகொடிந்து வீழ்ந்து மடிந்தனரோ?

சிந்திய குரதி வங்கக்கடலில் கலந்திட
பொங்கிப் புயல்கள் பிறந்தன-விண்ணில்
கலந்த உயிர்காற்றால் வானும் விம்மியே
அடை மழை பொழிந்தன

எங்கள் பிணமேடுகளும் மணமேடைகளாகும்
விட மாலை சூடும் போராளிகளால்
புரட்சியின் புது விதைப்புத் தொடரும்

வித்துடலாய் விழுந்த மானுடத்தின்
ஆணிவேரை முத்தமிட்டு புத்துயிர் அளிக்கும்
தாயக விடுதலைப் போராட்டம்
நாளும் புதிதாய் மலரும்

வெள்ளியலை ஆடும் நீலக்கடலல்ல
விடுதலைச் சுனாமியின் கருப்பை
இது மண்மேடல்ல – மா வீரர் துயிலுமிடம்

இடி மின்னல் ஆடும் மாரிமழையல்ல
அடை மழை நீராட்டும் பூமி

திரிமுடியில் நடனமாடும் சுடரல்ல
அக்கினி கொட்டும்  ருத்திரன் -நெற்றிக்கண்

இது மௌனராகமிசைக்கும் பூமாதேவியல்ல
பூகம்பம் விளையும் விளைநிலம்
இது சொர்கமல்ல சுதந்திர தேவி நடனமாடும்
சுந்தர பூமி-இங்கு
அக்கினி செங்கொடி பிடிக்கும்
தன்மானம் -ருத்திர தாண்டவமாடும்
பாடைகளில் வித்துடல் ஆகுதியாய் வேகிட
ஆனந்த சுதந்திர யாகம் தொடரும்

பூவினம் பூத்து மகிழ-புள்ளினம் பாடி மகிழ
பூந்தென்றல் தாலாட்டும் பூஞ்சோலையல்ல
இது சுதந்திரப் புயலாடும் பூமி
ருத்திர தாண்டமாடும் எங்கள் சாமி

*அன்பே சிவம்- வாழ்வே தவம்*
*Pax ravichandra- 31.3.2023*

# வித்துடல்

---

மாவீரர் துயிலுமிடங்கள் காண்போர் மனதை நெகிழவைக்க
கனல் ஏந்தி ருத்திர தாண்டவமாடிய புலிகள் ஆழ்துயில் கொள்ள
கண்டு கனல் பற்றி எரிந்த காளையர் மனம்
வீறுகொண்டெழுந்து வீரத்தாண்டவமாடிய மறவர் குணம்

விழுப்புண் தரித்தவர்கள்-ஜெய்ப்பூர் கால்களோடும்,
வெண்பிரம்போடும் புன்னகைத்து, நெஞ்சை நிமிர்த்தி நடந்திட
விம்மிய நெஞ்சம் வியந்து போற்றி வாழ்த்தி வணங்கிட
தமிழனின் வளையாத வீரம், மண்டியிட்டு வணங்காத கோலம்

வெடிக்காய்களாய் வித்துடல் வெடித்துச் சிதறிட
வைத்த குறி, எறி தேங்காய்போல் உடைந்து நொருங்கிட
ஆறடி மண் எதற்கு- அன்னைத் தமிழ் மண்ணில்
நாளும் உலாவருவோம் என்றே மாண்ட கரும்புலிகள்

விடமாலை சூடி, ருத்திர தாண்டவமாடி, வீழ்ந்தவரும்
“படமாகி” மாலை சூடி வீர வணக்கம் ஏற்க
மடிந்தும் வாழும் மறத்தமிழன் புகழை-
வீரகாவிமாய்ப் பாடுங்கள் புலவர்களே

விடுதலை வேள்வியில் ஆகுதியாய் வித்துடலும்-
அன்னையர் விழிநீரும் கலந்திட-மடிந்தும்
மனங்களில் வாழும் வேங்கை-தாலியறுந்தும்
வேங்கையின் துணைவி என மகிழும் வீரமங்கை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-12-06.2023

# யார் சொன்னார்?

---

யார் சொன்னார்? தமிழ் ஈழம் எட்டாத இலட்சியமாய்
கைக்கு கிட்டாத நட்சத்திரமாய் மாறிட
முள்ளி வாய்காலில்-சிங்களம் நீர்குடமுடைத்து
தமிழ் ஈழத்துக்கு கொள்ளிவைத்ததென்று?

ஆயுதப்போராட்டம் தோற்றிட
உயிர்களும், உடமைகளும் அழிய,-அகதிகளாய்
ஈழத் தமிழினம் உலகலைய, உறவுச் சங்கிலி சிதைய-நண்பா
தமிழ் ஈழக் கனவு கலைந்தது உண்மை-ஆயினும் எம்
தமிழ் உணர்வுகள் அழியவில்லை-உள்ளத்தே
ஈழ விடுதலையின் கனல் அணையவில்லை

சிந்திய குருதியால் சிவந்த மண்ணும்
புதிய விதைப்பிற்கு இன்னமும் தயாரில்லை,
அறுப்புண்ட தாலிகளுக்கும்
அங்கவீன உறவுகளுக்கும், அநாதைகளுக்கும்
விடிவுகாலம் பிறக்கவில்லை

முறிந்த பனைகளும் முளைக்கவில்லை-அச்சுறுத்தும்
நிலக்கண்ணிகளும் ஆழ்துயில் கலைக்கவில்லை-
கிழக்கே பாடும் மீன்களுக்கோ உணவில்லை

ஓடும் கண்ணீரும்-அழிந்த உறவைச்
சுமக்கும் நெஞ்சங்களும்-மீண்டும் தழைக்க
காலம் இன்னும் கனியவில்லை-எம்
கண்ணீர் மழைக்காலம் ஓயவில்லை

காணமற்போனவர்களும் கண்படவில்லை
அரசியல் கைதிகளின் கைவிலங்குகளும் கழரவில்லை-
கண்ணீர் தவங்களுக்கு கடவுளும் இரங்கவில்லை
பாதை மாறிய பயணம் வீடு சேரவில்லை

நடந்து வந்த பாதையிலோ குருதிக்கறைகள் காயவில்லை
கண்ணீர் வெள்ளம் வடியவில்லை
திசைமாறிய போராட்டம் பயங்கரவாதம்-
அவப்பெயர் நீங்கவில்லை- புரிந்த கொடும்
பாவங்களுக்கு மன்னிப்பு கிட்டவில்லை

இதயத்திலோ-இமயச்சோகம்
இறக்கி வைக்கச் சுமைதாங்கியில்லை
தலை வைத்து உறங்க தாய்மடி இல்லை

தாய் மண்ணைச் சுற்றி கடலாய் இராணுவம்
கவலை சூழ்ந்த முகங்களிலோ கண்ணீர் பிரவாகம்.
திறந்த சிறையில் எம் வாழ்வு.

சிந்திய குருதியும் புரிந்த தியாகங்களும்-பலனின்றி
பொய்யாய் போனதே- ஐயகோ விழலுக்கு இறைத்த
நீரானதோ? விடியல் வெகு தொலைவிலில்லை
நம்பிக்கைதான் நம் சுதந்திரத்தின் எல்லை

நண்பா காத்திருப்போம்
ஈழக்கனவை நெஞ்சில் காத்து-விடுதலை
கனலை அணையாது வளர்த்து
நாளைக்காய் காத்திருப்போம்
நம் விடுதலைக்காய் விழித்திருப்போம்.

இரத்தம் சிந்தும் யுத்தம் வேண்டாம்
சமத்துவ சமதர்மச் சமுதாயம் பறிக்க
ஓன்றே குலம்- அன்பே தெய்வம் தழைக்க
சத்தியமே பாதை-அகிம்சையே நம் தர்மம்

எல்லோரும் நலம் வாழ
இன மதம் கடந்த இன்ப உலகம் எம் நாடு

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-23-05-2023*

# யார் சொன்னது தமிழா

யார் சொன்னது தமிழா?
போராட்டம் ஓய்ந்ததென்று-எம்
தாயக் கனவு கலைந்ததென்று?

குண்டு சாய்த்த உடலங்களின்
மூடிய விழிகளைத் திறந்து பார்
வெட்டிச்சாய்த்த மானுடத்தின்
இதயத்தை திறந்துபார்

எங்கள் போராட்டம் ஓயவில்லை
தமிழ் ஈழ கனவு கலையவில்லை
கட்டிக் காத்த கனவு நனவாக
உரமாகும் உறவு
புன்னகையால் சொல்லும

எறிகணைகளும் சுடு கலன்களும்
எம்மைச் சாய்கலாம்
எம் தேசத்தை வதைக்கலாம்
இரும்பாய் எழுந்து நின்ற
தென்னை பனைகளை முறிக்கலாம்

தேனாய் இனித்து, அமுதகானமாய் ஒலிக்கும்
விடுதலை கேபாராட்டத்தை மாய்க்குமோ?
பாடும் மீன்களையும், பரவசமயாய்
வளரும் பனைகளையும்  கேட்டுப் பார்

இங்கு விளையும் பயிர்களும்
வீசும் காற்றில் கலந்த விடுதலை உணர்வும்
எங்கள் தாகம்
தமிழ் ஈழம் தாயகம் எனப் பாடும்
தமிழா கேட்டுப் பார்?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-4-4-2023

# யாசகம்

---

வெறிறிய இனவாத பிக்குகளின்
சீவர ஆடையை சிவப்பாக்கிட
நீ சிந்திய இரத்தம் போதாது-ஈழத்தமிழா
இன்னும் கொஞ்சம்இரத்தம் கொடு
புத்தர் யாசிக்கின்றேன்.

காணாமல் ஆக்கப்பட்டவருக்காய்
கண்ணீர்த் தவமிருக்கும் தமிழ் அன்னையரே
இனவாதத் தீயால் கருகி வாடிடும்
வெள்ளரசு தழைக்க
கொஞ்சம் கண்ணீர் தாருங்கள்

நல்மனத்தோரே ஒன்றாய்க் கூடி வாருங்கள்
இனவாதச் சகதியல் புதைந்த-
தர்மச்சக்கரத்தை மீட்டுத் தாருங்கள்

அமைதி , ஆனந்தம் நம் மெய் இயல்பு
அட்டாங்க மார்க்கமும், பஞ்ச சீலமும்
வாழ்வானால் நிலைக்கும் சகோதரத்துவ உறவு
அதுவே உண்மைச் சுதந்திரம்

புத்த நிலை நம்முள்ளே -புரிந்தால்
யுத்தம் எதற்கு? பிரிவினை எதற்கு?
அதிகாரம் பகிர்ந்து அனைவரும் சகோதரர்
என்றுணர்ந்து வாழ்ந்தால் அமைதி நம் சொந்து

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-

# யுத்தப் பேரிகை

---

எரியும் டயர்களில் -தீ அணையவில்லை
ஒலிக்கும் துப்பாக்கிச் சத்தங்களும் ஓயவில்லை
இனவாதம் மௌனிக்கவில்லை
அகதி, விதவை, அநாதைகளின் எண்ணிக்கை
நாளும் கூடிடும் அபாயநிலை
தீராத பகையும், ஓயாத யுத்தமும்-தேசத்தில்
இன்னமும் தீர்ந்தபாடில்லை.

யுத்தபேரிகையின் ஓயாத முழக்கம்
அப்பாவிகளைக் கலங்கடிக்க-காயாத
கண்ணீரும், குருதியும் இறைவனைக் கூவிக்களைக்க,
கடலிலும், வானிலும், தரையிலும் தீ நடனமாடிக்களிக்க
காற்றிலே எரியும் பிணங்களின் மணம்.
மானுட நெஞ்சிலோ ஆறாத ரணம்.

நீலவானும் கரும்புகையால் நிறம்மாற
நித்தம் கண்ணீர் மழை பொழியும் மேகங்களாய்
அப்பாவி மானுடம் உருவழிய
செங்கடலாய் மாறிடும் நந்திக்கடல்
நாறி மணக்கும் குடல் கிழிந்த
தலை சிதறிய பலநூறு உடலங்கள்

யுத்த மோகம் இரத்த மழை பொழிய
சொந்தமோ கண்ணீர் மழைக்காட்டில் அலைய
சர்வதேசமோ கைகட்டிப் பார்த்திருக்க
இன அழிப்பாய் அசுர வேள்வி
தமிழ் ஈழக் கனவோ படு தோல்வி

ஓ என் நாடே! என் தாய்த்திருநாடே!

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-11-05-23

# யுத்தம் ஒரு தொடர் கதை- 1990

வெண்புறாவும், வெள்ளைக் கொடியும் ஒன்றாய்ச் சாய
விடிவு வந்ததென்று நம்பிய மனங்களைக்
காரிருளாய் கவ்விய அச்சம்-வீழ்ந்தவர் சிந்திய இரத்தமும்
வாழ்ந்தவர் அழுத கண்ணீரும் காயுமுன்னர்
இரத்த வெறியர் மீண்டும் தொடங்கிய யுத்தம்

யுத்தத்தை கட்டவிழ்த்து, அமைதியைச் சுட்டெரித்து
அப்பாவிகள் அகதி, விதவை, அநாதைகளாக
குண்டு மழையில் குடியிருப்புகள் சுடுகாடாக்கிட
மீண்டும் தொடரும் யுத்தம்

வனவாசத்தில் போராளிகளும்-இனவாதத்தில்
அரசியல்வாதிகளும் குளிர்காய
பிணவாசத்தால் தென்றலும்- தெள்ளிய
நீரோடைகளும் நாறி மணந்தன

எரிமலையாய்க் கனல் கக்கி
வான்மழையாய் குண்டுகள் பொழிந்து
கடலலையாய் திரண்டு வரும் சிங்கள படைகளால்
வங்கக்கடல் சிவப்பாகி வாழும் மண்ணோ தீக்கிரையானது

எட்டப்பர் காட்டி கொடுத்திட்ட-நள்ளிரவில்
முட்டியில் சுடப்பட்டு முடமாக்கப்பட்டு,
எரியும் டயர்களில் தகனப் பலியான
கட்டபொம்மன்கள், ஊமைத் துரைகள்

புகையாய் சாம்பலாய் மாறிட்ட உறவுகளை-விடியலில்
மொய்த்த விழிகள் கண்ணீர் சிந்திச் சிவந்திட
கூடி வாழ்ந்த உறவுகளின் தாலிகள் வாடி உதிர்ந்திட
ஆதியில்லாச் சாதி பீதி மறந்து பெரும்போருக்கெழுந்த நேரமது

பட்ட மரமும் பச்சை மரமும் ஒன்றாய்
எரியுண்ட அவலமுமிங்கே-வேங்கைகளும்,
புள்ளிமான்களும் வேறுபாடின்றி ஒன்றாய்
வேட்டையாடப்பட்ட கொடுமைகளுமிங்கே.

துள்ளித் திரிந்த கன்றுகளை தாய்களோடு கொன்றழித்தார்
கள்ளமர்ந்த முல்லை மலர்களை கசக்கித் தீயிலிட்டார்
வெள்ளைப் புறாவைச் சுட்டு ஒலிவமரத்தினை
வெட்டி வீழ்த்தி வெறியாடினார் இனவாதிகள்

கத்தும் கடலேழும் கண்ணீரால் உப்பாகி-
இரத்தத்தால் சிவப்பாகிடகருவான் நிலவும் -துக்கத்தால்
கார் மேகம் சூடி சோகம் சொன்னது.

புள்ளிகுயில்களின் இணையழித்துப் பாடிடச்
சோகம் சொல்லிக் கொடுத்தார்
வண்ணமயில்களின் கால்களையுடைத்து
ஆனந்தத் தாண்டவமாடிட ஆணையிட்டார்.

பள்ளிச் சிறார்கள் பாடையில் உறங்கிட
கன்னித் தாய்களின் கற்பினை
கொள்ளையிட்டார் காமவெறியர்

இனவாத நெருப்பில் ஈழமெரிய பழிவாங்கும் வெறியில்
இராணுவமலைய, கனவாய் காணும்
தமிழ் ஈழ விடுதலையை நனவாக்கிட களம்புகுந்தார்
விடமாலை சூடிய வீர வேங்கைகள்

கொடிய யத்தமொன்று மீண்டும் கட்டவிழ
விடியாத இரவுகளாய் நாட்கள் தொடர
இனவாத யுத்தத்தால் குருடாகி-பிணவாடைக்கும்,
கண்ணீருக்கும் நிர்ப்பீடணமானதோ மானுடம்?
இல்லை பிணி, முப்பு. சாவைக்கடந்து
பரிநிர்வாணமடைந்ததோ எம் இனம்?

மீன்பாடும் தேன்னாட்டில் ஒப்பாரியும், அழுகையும் -
கூடவே துப்பாக்கிச் சத்தங்களும் ஓயாமல் கேட்டிட
கதிராடும் வயற்காட்டில் களைகளோடு மிதிவெடிகளும்
நிலக்கண்ணிகளும் கூட முளைத்திட
வானெழுந்த டயர் புகைகளினால்
எழுவான்கரையும் படுவான்கரையானது

தீயுண்ட பிணங்கள் வீதிகளில் நாறி மணக்க
உறவுகளைத் தேடிக் களைத்த சொந்தங்கள்
கண்ணீர் சிந்தி ஒப்பாரிவைத்துப் புலம்ப
ஊளையிட்டழுத வளர்ப்பு நாய்கள்

பாடும் மீன்களும் முகாரி இசைத்திட-
கள்ளிருக்கும் வண்ணமலர்களை விலக்கி
தேனீக்களும் நோன்பிருந்து சோகம் சொல்ல
பட்ட மரத்தில் கரையும் ஒற்றைக் குயில்

தென்னையும், செந்நெல்லும் விளையும்  பூமி
களைவிளையும் காடனதுமேனோ?
கன்னியரும், காளையரும் காதல் செய்து
களிமணம் புரியும் பூமி சுடுகாடானதுமேனோ?

முல்லையும் மருதமும் நெய்தலும் கோர யுத்தத்தால்
“பாலையாகிட” -வெள்ளைப்புறாவும், ஒலிவமரமும்
வெடிகுண்டுகளால் ஒன்றாய் வீழ்ந்து மடிந்திட
சோகம் சொல்லும் புள்ளிக் குயில்

புள்ளிமான்களும், வெள்ளாடுகளும் பலிகடாக்களாய் வீழ்ந்திட
துள்ளி விளையாடும் கன்றுகளும் துப்பாக்கியேந்தி களம் புகுந்திட
குண்டு மழையிலும் குருதிச் சேற்றிலும் ஒரு புது விதைப்பு
இளவேங்கையர் நெஞ்சங்களில் எரியும் விடுதலை நெருப்பு

துள்ளித்திரியும் பருவத்தில் துப்பாக்கியேந்தினார்
பள்ளிசெல்லும் பருவத்தில் வனவாசம் பழகினார்
கள்ளமில்லா நெஞ்சில் ஈழக்கனவினை இலட்சியமாக்கினார்
கடைசியில் களம் விழுந்தே விடுதலைக்கு வித்தாகினார்

விழிகளில் கங்கை பாய
மொழிகளில் அழுகைகள் ஒலித்திட
ஈழ விடுதலைக்கு இன்று பலியானதோ
இளம் செம்மறி, முதற் களம் கண்ட தமிழ் புலி

செந்தணலாற்றில் தினம் நீந்தி
பைந்தமிழிற்காய்ப் போராடி -விந்தைகள் புரிந்து
எதிரிகள் பல கொன்றவர்- வீழ்ந்திட்டாலும்
சிந்தை, நினைப்பு, செய்கை உள்ளளவும்-என்றும்
எந்தையர் நினைவில்-மா வீரர்
மங்கா நினைவாய் வாழ்ந்திடுவாரே.

***அன்பே சிவம்-வாழ்வே தவம்***

*Pax Ravichandra-26.3.2023*

# யுத்தம், இரத்தம், யதார்த்தம்

---

வாழ்வு தந்த வயல்வெளிகள் வனப்பிழந்து கண்ணிவெடிக் காடாய் மாறிட
களை வளர்ந்து பொலிவிழந்து நாறிட-நொண்டிப் பசுக்களும் அஞ்சிப்
புலம் பெயர்ந்து வேறு திசையில் மேய்ந்திட,காடாய் மாறிடும் வாழிடம்
இன்றோ நாளையோ கறையான்-அரவங்களின் புகழிடம்

முள்ளை, முள்ளால் எடுக்க முனைந்தவர்களே நெருஞ்சி முள்ளானார்
ஆண்ட பரம்பரை மீண்டும் ஒரு முறை ஆள நினைப்பதில் என்ன குறை
அடுக்கு மொழி பேசியவர்களோ ஆழி கடந்து தப்பி ஓடினார்
அப்பாவி ஏழைகளோ, அநாதை, அகதிகளாய் மாறினார்

தென்றல் வீசுமென்றார்-தேசத்தை யுத்தப் புயல் அழித்தது
தேன் மழை பொழியும் என்றார், தீ மழை பொழிந்தது
அலையாடும் கடலில் -தினம் நீராடி விளையாடுவோம் என்றார்
கடற்படையும், கடற்கண்ணிகளும் அச்சுறுத்தின

கடலும், வானும், தீப்பிடிக்க, கண்ணி வெடிகள் பூமியை கலங்கடிக்க
முப்படையும், முகமூடிகளும் அப்பாவிகளை வேட்டையாட
ஆயுதக் கலாச்சாரம் புதிய வேதமென்றார்-பயங்கரவாதம்
பஞ்ச தந்திரம் தாண்டிய ஆறாம் தந்திரம் என்றார்.

நாம் எல்லோரும் இந்நாட்டு மன்னர் என்றார்
ஆயுதக் கலாச்சாரம் அரியணையில் அமர்ந்திட-ஏழைகள்
வாழ்வில்-கழுவியும் போகாத கண்ணீர், குருதிக் கறை
கல்லறைத் தோட்டமாய் மாறிட்ட வட கிழக்கின் அவல நிலை

எரியும் டயர்களில் கனவான வாழ்வும் கரியாக
விளக்கு கம்பங்களில் மானுடம் அராஜக நீதிக்குப் பலியாக
அச்சத்தால் உறையும் அப்பாவிகளின் செந்நீர்
அழுகையின்றி விழிகளில் ஒழுகும் கண்ணீர்

வெள்ளை கொடிகளில் குருதிக்கறைகள் படிய
தொப்பிள், தாலிக்கொடிகளும் அறுந்து சரிய
வெள்ளைப் புறாக்களில் விருந்து படைத்து-ஒலிவ
இலைகளில் உண்டு களித்த ஆயுதக் கலாச்சாரம்

கண்ணீர் நதிகளும் ஓடிக் களைக்க-அநாதை, விதவை
அங்கவீனச் சந்ததிகளும் பெருகித் தவிக்க
பாடும் மீன்களும் பயந்து கானம் மறக்க, தென்னை
பனை முறிந்து சாயத் தொடரும் யுத்தம்

ஆலய மணிகளும், வாங்கொலியும், பிரித் ஒலியும் மௌனிக்க
ஆயுதக்கலாச்சாரம் ஆண்ட இருண்ட காலம்.
அறிவாலயமான யாழ் நூலகம் அக்கினிக்கு இரையாக
மாணவப் பருவத்தையும், கல்விச் செல்வத்தையும் கொள்ளையிட்டு
பெற்ற வயிறுகளை எரிநரகாய் சுட்டெரித்த பயங்கரவாதம்

காணாமல் போனவர்களும்-காலவரையரையின்றி
விசாரணையின்றி வாடும் அரசியல் கைதிகளும்
வெளிச்சத்திற்கு வந்த மனிதப் புதைகுழிகளும்
மனித உரிமை மீறல்களை அம்பலப்படுத்த
கல்லாய் போன இனவாத அரசு, கருகிப்போகும் வெள்லரசு

கடல் கடக்கும் புலம் பெயர் அகதிகளின்
கண்ணீர் யாத்திரைகள் தொடர்ந்திட
கங்கையிலும், ஆறுகளிலும் -பிணங்கள் மிதந்திட
நீதி தேவதையை குருடாக்கிய யுத்தம்
பூமியெங்கும் மனித இரத்தம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-18.06.2023*

# யுத்த பூமி

---

பலியும், சடங்குமான கோயில்களை விடத்-தாய்
மண்ணின் மடியில் துயிலும் போராளிகளின்
சமாதிகள் புனிதமானவை.

இந்திய ஏகாதிபத்தியச் சிலந்தியின் இராணுவ வலை-
சுதந்திர ஈழத்தை விழுங்கிட-அமைதி
உடன் படிக்கையின் உருவில் உருப்பெறும் நேரம்
எங்கள் தெருவெங்கும் பழிவாங்கும் புலிவேட்டைப்
பண்டிகைக்காய் பலத்த ஆரவாரம்

தெருவெங்கும் துப்பாக்கி வெறிநாய்கள்-
புலிகளை விரட்டி வேட்டையாடிட
பறைகள் முழங்காமல், பாடைகளில் போகாமல்
காக்கைகள் உண்டு சலித்து-கழுகுகள் உண்ணட்டும் என
சாலையெங்கும் நாறிக்கிடந்த சவங்கள்

ஆற்றில் மிதந்த அழுகிய உடலங்களை மீன்கள் உண்டு சலித்திட
கடலில் கலந்த உடலங்களை அலைகள் பரிவோடு கரை ஒதுங்கிட
கண்ணீரில் நீராடி கவலைத் தீயில் வேகும் தாய்க்குலம்

பிணங்கள் தேடி மீன்கள் ஆற்றைக் கலக்கிட
நரிகள் ஊரைக் கலக்கிட-புலிகளைத் தேடி
காட்டையும், வீட்டையும் மங்கையர் கற்பையும்
கலக்கும் -இந்திய அமைதிப் படை

இந்திய சமாதான  உடன் படிக்கையில்
ஈழத் தமிழர் உயிர்களுக்கோ -மலிவு விலை
இந்திய மலிவுப் பொருட்களுக்கோ அநியாய விலை

காய்ந்த குருதியினால் கன்னியர் குங்குமம் இட்டார்
கண்ணீர் மணிகளினால் அன்னையர் மாலைகள் கோர்த்தார்
ஓய்ந்த குரலால் மூதாட்டிகள் ஒப்பாரி வைத்தார்
சாய்ந்த மனைகளினால் தந்தையர் சிதைகள் அமைத்தார்

மாய்ந்துபோன தம் மைந்தருக்காய்-ஈழத்தே
உறவுகள் போடும் கண்ணீர் கோலங்களிவை
உணர்வுகள் எழுதும் துன்பக் கவிதைகளிவை

***அன்பே சிவம்-வாழ்வே தவம்***

Pax Ravichandra-26.3.2023

# அவதாரம்-பிரக்ஞையின் எழுச்சி

----------------------------------------------------------------------

இறைவா-நீ இன்னும் பல முறை பிறக்கவேண்டும்-
மானுட அவலங்கள் தீர்க்க
அவதாரங்கள் பல எடுக்கவேண்டும்

மாசுற்ற பூமியின் நஞ்சுகள் நீங்கிட ***நீலகண்டனாய்,***
மாசற்ற பிரகலாதன்கள் கண்ணீர் துடைத்து
சிறுவர் துஷ்பிரயோக அசுரரை ஒழித்திட
***நரசிம்மமாய்*** அவதரிக்கவேண்டும்.

ஓயாத அதர்ம யுத்தங்கள் ஓய்ந்திட-நல்லோர்
***அருச்சுனனாய்*** மாறி குருஷேத்திரம் ஏகிட
கீதை சொல்லும் –***கிருஷ்ண அவதாரமாய்***
***பார்த்தசாரதியாய்*** வரவேண்டும்

பாலியல் கொடுமை ஒழித்து ,
பாவையர் துன்பம் தீர்த்திட-சீதைகளின்
கண்ணீர் துடைத்திட ***இராமனாய் வரவேண்டும்***
இராவணர்களை அழிக்கவேண்டும்

அறியாமை அகன்று, மத வெறி மறைந்திட
***அஹம் பிரமஸ்மி*** என்ற அத்வைதம் நிலைத்திட
***புத்தர் பெருமானாய்*** வரவேண்டும்

அறியாமை ஒழிந்து அனைவருக்கும்
சத்தியம் புரிந்திட
***ஓஷோவாய்*** வரவேண்டும

அதர்ம உள்ளங்கள் திருந்திட
அன்பே இறைவன் என்று அறிந்து வாழந்திட
கருணை பொழிந்து கடையவரும் மீட்புற
எதிரிக்கும் அன்பென்று மொழிந்திட்ட
***இயேசு பெருமானாய்*** வரவேண்டும்

இன்பம் சூழ்ந்து இல்லங்கள் ஒளி பெற
விவாகரத்துக்கள் இல்லாது ஒழிந்திட
வீட்டுகு ஒரு ***நல்ல தாய் மரியாளாய்***
***நந்தந்தை சூசையாய்*** நீ வரவேண்டும்
இன்பமே சூழ, எல்லோரும் நலம் வாழ

சாதியம் அழிந்து, சமதர்மம் நிலைத்திட
மனுஸ்மிருதி ஒழித்து மனிதநேயம் மலர்ந்திட
இன, மத,மொழி, நிற பேதங்கள் மறைந்திட
ஒன்றே குலம்! ஒருவனே தேவன்!
என உன்னைப் போற்றிட
புதிய வானம், பதிய பூமி படைப்பாய் இறைவா

ஆயுதங்கள் இல்லாத அன்பு உலகில்
பசுவும் சிங்கமும் புல் உண்டு பசியாற
விரியனும், பச்சிலம் குழந்தையும்
ஒன்றாய் கூடி மகிழ்ந்து விளையாட
மதங்கள் மறைந்து, பிரிவினைகள் ஒழிந்திட
அன்பே சிவம்
அனைவரும் சமம் என்றே கூறு

அமைதி பூங்காவாய் மனதை மாற்று
அதுவே சொர்க்கம் எனக் கூறு.

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra*

# மண்ணில் வீழ்ந்த மகுடம்

---

யாழ் பண் மறக்க, பனை முறிந்து தலை இழக்க
உயிர் தமிழுக்கு, உடல் மண்ணுக்கு எனப் போராடிய
விடுதலைப் புலிகளும், அப்பாவித் தமிழரும் ஒன்றாய்
உயிரிழக்க நடந்த முள்ளி வாய்க்கால் யுத்தம்

மண்ணும் அனலாக, கடலும் தீயாக
வான் கறுத்து முகம் மறைக்க-வணங்கா முடியும்
மண்ணில் வீழ்ந்தாரோ? மடிந்தாரோ?-தமிழ் ஈழம்
கலைந்தே கனவானதோ? பழங்கதையானதோ?

பாடும் மீன்களும், கானக்குயில்கள் கேவிக் கரைய
எங்கள் கனவும் கலைந்தே போனது
சிங்கமும் அஞ்சிட-சினந்து குமுறிய
தமிழ் ஈழ விடுதலைப் புலியும் மாண்டு போனது?

பாராண்ட பேராண்மைத் தமிழனின் வாரிசை
கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே முன்தோன்றிய
மூத்த குடியின் வீரத்தை வஞ்சகமாய்
வீழ்த்திய கொடுமை இன்று.

பூவும் பொட்டும் வாடமல், புன்னகையும் உதிராமல்
நம்மை நாம் ஆள வேண்டும் என்ற அருந்தவமும் வீணானதே
வீரமகுடம் மண்ணில் சாயக்- கண்ட ஈழக் கனவும் கலைந்து போக
தமிழ் நெஞ்சங்கள் வாடிப்போனதே

காடும் கடலும் கண்டு மகிழ உலாவிய வீரபுருஷனை
அலையும் தேட, மரங்களும் இலை உதிர்த்துச் சோர
நிலவும் தேயக், கதிரும் மறையக் கேவிக் கரையும் மனசு

கடலும் அரைமோதிக் கரைய, கரும்புலியும்,
கடற்புலியும், வான் புலியும் சினந்து போராடி மடிய
நிமிர்ந்த நடையும், நேரிய பார்வையும் மறைந்ததோ?
மறவா வீரமும் மண்ணில் சாயந்ததோ?

ஈழத்தமிழனின் நம்பிக்கையும் நலிந்து மடிந்ததோ?
தன்மானத் தமிழன் என்ற மாறாக் கர்வமும் மறைந்ததோ?
நெருப்பாற்றில் தினம் நீராடிய புலியும் மாண்டதோ?
புலிகளின் தாகம் -தமிழ் ஈழத் தாயகம் கோஷமும் ஓய்ந்ததோ?

நெய் வளர்த்த தீயில் நீராடி, பேரினவாதப்
பொய் ஒழியப் போராடி, எரியும் டயர்களில் நீறாகி
உயிர்த்தே தமிழ் மனங்களில் சுவாசமாகி உலாவிட -உதித்த
வீரத்தின் விளை நிலமும் வீழ்ந்ததோ? ஐயகோ
எம் சுதந்திரச் சுடரும் அணைந்துபோனதோ?

ஆண்ட பரம்பரை மீண்டும் ஒரு முறை-தம்மை
ஆளக் கனவு கண்ட வீரம் வீழ்ந்ததோ? தமிழ் ஈழ
வரலாற்றில் வித்தாய் மாறி மீண்டும் முளைத்திட-
தமிழ் மனங்களில்
ஆழப்புதைந்ததோ? ஆளப்புதைந்ததோ?

மடிந்தாலும் வீரனுக்கு மரணமில்லை
வாழ்ந்தாலும் கோழைகளுக்கோ நாளும்
நூறு மரணமே

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra - 30.05.2023

# நிலவு தூங்கும் நேரம்

நிலவு தூங்கும் நேரம் திலகமில்லாத நெற்றியாய்க் கருவானம்
வெள்ளிப் பூக்களாய் மின்னும் நட்சத்திரங்கள் கண்சிமிட்டி
உலாப்போகும் மேகங்களை வாழ்த்தி நிற்க,
வானுயர்ந்த மரச்சோலை நடுவே, அமைதிப்பூங்காவாய்
அமைந்திருந்த எழில்மிகு சிங்களக் கிராமம்

வற்றாத வளமாய் சுற்றி ஓடும் நதி மண்ணுக்குப் பசுமை சேர்க்க
ஓயாத உழைப்போ மண்ணையும் பொன்விளையும் பூமியாக்க
நகரம் காணாத தொலைவில் நாகரீகம் தீண்டாத நிலையில்
தன்னந்தனியாய்- ஏழைகள் வாழும் சொர்க்க பூமி

இங்கொன்றும் அங்கொன்றுமாயக், களிமண்பூசி
ஓலை மேய்ந்த வீடுகளும், ஓலைக் கொட்டில்களும்
ஏழ்மையை காட்டி நிற்க, இனவாதம் மதவாதம் அறியாத
ஏழைகள் மனதோ இருப்பது போதுமென்றே
இன்புற்றிருக்க, ஓயாத இன்பம் இங்கே.

மண்ணோடு உழைத்து விளையாடி
மண்ணை நேசித்து மண்ணால் வாழும்
மண்ணால் செய்த மாமனிதர் வாழும்
பொன் விளையும் பூமியிது.

நாளெல்லாம் உழைத்த களைப்புத் தீர,
உண்டு குடித்து பசியாறியபின் உறவுகளோடு
கதைபேசிக் களிக்க வீட்டு முன்றலில்
அமர்ந்திருந்த சொந்தங்கள்

சில்வண்டுகளும், சுவர்க்கோழிகளும் இசைமீட்டிட
தங்கச்சுடர் தாங்கிய குப்பி விளக்குகள்
இருளில் வெள்ளிக் கோலமிட, வெற்றிலை இடிக்கும் ஒலி
மூதாட்டியின் இருமலைத் தாண்டி, இரவின்
நிசப்தத்தை கலைக்க, கதைபேசிக் களித்த உறவுகள்

நீரோடையில் குளித்த தென்றல் ஊரோடு உறவாட
சீதளதென்றலின் அணைப்பில் பயிர்களும் பரவசமாய்
கூத்தாட, ஊரும், உறவும் ஒன்றாய்க் களித்து
மகிழ்ந்திருந்த இனிய இரவுப்பொழுது

“டாங் -டாங்”- “டாங் -டாங்”- தொலைவில் ஒலித்த
பன்சாலையின் மணியோசை தேனாய்க் காற்றில் விழ
“புது சரணம்” என்றே தொழுத வயதான உள்ளங்கள்

செல்லக் குழந்தைக்குப் பாலூட்டி மகிழ்ந்தவளும்
கயல்விழிகளால் காதல் கதைபேசி மகிழ்ந்தவளும்
கண்ணயரும் குழந்தையை தோளில் இட்டு
தாலாட்டு பாடியவளும், துள்ளி விளையாடும்
செல்வங்களை தோளில் சுமந்து களித்தவனும்
கன்னிமடியில் தலைசாய்த்து காமன் கணைகளால்
புண்படும் காதலனும் கொஞ்சி மகிழ்ந்தே
கூடி வாழும் ஏழை கிராமம்
கதைபேசி களித்திருந்த கவிதைப் பொழுது

வறுமையின் வாசம்-வாழ்வில் தெரிய
உழைப்பின் உயர்வோ மண்ணில் விளைய
கண்ணயரும் வேளை வரும் வரை
கதைபேசி மகிழ்ந்திருந்த சொந்தங்கள்

எங்கோ கூகை ஒன்று கூவிட
கோட்டான் ஒன்று சிறகடித்துப் பறந்தது

வெள்ளி முளைத்த இரவில், ஊர் எல்லையின் முடிவில்
மெல்லியதாய் கேட்ட வெடிச் சத்தம், ஊர்காவல் படையின்
உறங்காத விழிப்பைச் சொல்ல, நாய்களின் ஊளையும் குரைப்பும்
காற்றை கிழித்து அபஸீரமாய் ஒலிக்க, மரங்களில் உறங்கிய
பறவைகள் விழித்து சிறகுகளை அடித்து ஓய்ந்தன.

ஆந்தை ஒன்று அலறிப் பறந்திட
ஊமை குளிரும் உழைப்பின் களைப்பும்
உறங்க அழைத்திட ஊரும் உறங்கியது
உறங்காத வெள்ளிகளும் உறங்கின.

விழித்துக் கிடந்த குப்பி விளக்குகளும்
களைப்பென்று கண்ணயர, காரிருள் எங்கும் சூழ
அரவமயர் ஊர்ந்த காலன் படையணி
ஏழைக் கிராமத்தில் நுழைந்தது

கத்திகளும் வாட்களும் தாங்கி கொலையணி பதுங்கி
முன்னேற, விக்கித்து அச்சத்தில் விறைத்த நாய்கள்
வாலைச் சுருட்டி முனகிட, படைக்கலம் தாங்கிய
மனிதரால் கொலைக்களமான ஊர்

கோட்டானும் கூகையும் அச்சத்தில் உறைந்து
அமைதி காத்திட, சில்வண்டும் சுவர்க்கோழிகளும்
மௌனித்தே தங்கள் எதிர்ப்பைக் காட்டின.

வெட்டுண்ட ஆண்களோ விருட்சங்களாய் விழுந்து கிடக்க
பட்டுப்போன பூக்களாய் பருவமங்கையர் உதிர்ந்து கிடக்க
கட்டுண்ட மாலையைக் கவி கலைத்ததோவென
பால் மணம்மாறப் பாலகர் குத்துண்டு கிடக்க, கோர்க்கவும்
பொறுக்கவும் ஆளின்றி, கொட்டுண்ட முத்துக்களாய்
வெட்டுண்டே இரத்த வெள்ளத்தில் கிடந்த தாய்கள்

வெள்ளி மலராத இரவில்
துள்ளி விளையாடிய கன்றுகளோடு
உறங்கிடப்போனவர்-வெட்டுண்டும் குத்துண்டும்
மீளாத உறக்கத்தில் தூங்கிடப்போனார்

உண்டு குடித்து கந்தலால், மானம் மறைத்த
ஏழைகளுக்கோ இன்று மரணயோகம்
எங்கோ வாழும் உறவின் விழிகளுக்கோ
என்றும் ஓயாத கண்ணீர் யாகம்

கொட்டில்களையும் குடிசைகளையும்
பாடுபட்டு வளர்த்த பயிரையும் தீயுண்ண
இனவாத யுத்தத்தில் இன்று பழியானது
சுந்தர ஏழைச் சிங்களக் கிராமம்

இனவாத நெருப்பில்- எரியும் இலங்கை
கொலைக்களமாய் உருமாறும் கொடுமை
என்றுதான் ஓயுமோ? புத்த தம்மமும்
சமாதானத்தை நிலைநிறுத்தமோ?

பகைமையை பகைமையால் தணிக்கமுடியாது.
பகைமையை அன்பினாலேயே தணிக்க முடியும்.
இதுதான் தொன்று தொட்டு வருகிற தர்மமாகும்.

***போராளிகளின் கரங்களில் அப்பாவிகளின் குருதிக்கறை***
***விடுதலைப் போராட்டம் பயங்கரவாதமாய் மாறிய***
***அவல நிலை, பெருமன் புத்தர் விழிகளில் கண்ணீர்த்திரை***

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra*

# பக்தியும் பதவியும்

---

ஆட்சியிலிருந்த காலமெல்லாம் அனைவரும
கண்டு மெச்சிடத் தொலைக்காட்சியில்
ஒரு காட்சியாய் மாதம் வரும் பௌர்ணமிதோறும்-
அலரி மாளிகையில்- மகிந்தாவின் புத்த வழிபாடு

வெண்ணாடை அணிந்து குடும்பத்தோடும், கூப்பிய கையோடும்
புத்தர் பெருமானை தொழுது, பிரித் ஓதி-நூல் அணிந்து
தம்ம போதனையை பக்தியோடு செவிமடுத்து
உத்தம பௌத்தனாய் வாழ்ந்த காலம்-மாதத்தில்
அந்த ஒரு பௌர்ணமி நாள் போலும்.

பௌத்தத்திற்கு, ஒவ்வாத இனவாத அரசியலில் குடும்ப அரசியலை
நிலைநாட்டிட சொந்தங்களைப் பதவியிலமர்த்திய சுயநலவாதி
திருடிய தேசிய சொத்துக்கும் அளவில்லை, நடந்த கொலைகளுக்கும்
-புரிந்த மனித உரிமை மீறல்களுக்கும் குறைவில்லை

"வெள்ளை வான்" கொள்ளையிட்ட தமிழ்ச் செல்வங்களும்,
"கிறிஸ் மனிதனால்" கதிகலங்கிட்ட தமிழ்ச் சமூகங்களும்,
மடிந்த ஊடகவியலாளரும்-விசாரணையின்றி சிறையில் வாடும்
அரசியல் கைதிகளும்-காணாமல் ஆக்கப்பட்டோரும் எனப் பல்லாயிரம்

நீதிதேவதையின் தராசு கள்ளத் தராசாய் மாறிட
வாழ்நாள் தலைவனாய் மாறிட அரசியல் அமைப்பை மாற்றி
அதிகார துஷ்பிரயோகத்தின் உச்சம் தொட்ட
மகிந்தாவின் சர்வாதிகார அரசு

சோதிடம் பார்த்து காரியம் புரிந்து, தலதாவை
தவறாமல் தரிசித்து மும்மணிகளின் ஆசி பெற்று
திருப்பதி வேங்கடசலாபதியை பூஜித்து
பேரினவாதம் வளர்த்த அரசியல் வித்தகன்

தமிழர் ஒற்றுமையை குலைத்து, பௌத்தம் போற்றிக்
காவிகளை அணைத்து அராஜகத்தை கட்டவிழ்த்து
ஆட்சி நிலைக்க பதவியை காக்க முயன்ற சர்வாதிகாரி-
அவலமாய் ஏமாந்து தோற்றுப்போன அரசியல்வாதி

பாலங்களும், அதிவேகப் பாதைகளும் அமைத்து நாட்டை முன்னேற்றி-
மத்தள விமான நிலையமும் அம்பாந்தோட்டை துறைமுகமும் அமைத்து
நாட்டை கடனாளியாக்கி-சீனாவிற்கு கையளித்த கடனாளி

இறுதிக் கட்ட யுத்தத்தில் பல்லாயிரம் தமிழர் கொல்லப்பட
அப்பட்டமாய் அனைத்தையும் மறுத்து, புலிகளை அழித்த
சிங்களப் பேரினவாதி, இரு நூறு ரூபாய்
தாளில் தன் ரூபத்தை அச்சிட்ட சுயநலவாதி

மறைக்கப்பட்ட புதைகுழிகளுக்குள், மறுக்கப்பட்ட நீதி மறைந்திட
கொல்லப்பட்டவர் குரல் வானை எட்டிட, குற்றங்களுக்கும்,
இனப் படுகொலைகளுக்கும் ஆதாரமின்றி-குற்றம் நிருபிக்கப்படாது,
சட்டம் தண்டிக்கமுடியாது தப்பித்த அரசியல்வாதி

இனவாதம், மதவாதம் மலிந்த விபச்சார அரசியலில்
மீண்டும் ஒரு திடீர் திருப்பமாய் -புதிய பிரதமராய்
மகிந்தாவின் இரகசியப் பதவிப் பிரமாணம்-

முடி இழந்தவன் -மீண்டும் மணி முடி சூடிய அவலம்
இடியும், மழையுமின்றி தோன்றிய "கறுப்பு வானவில்லில்"
பதவிக்கும், பணத்துக்கும் சோரம் போய், தமிழினம்
தலைகுனிய தமிழ் அரசியல்வாதிகளின் வேசித்தனம்

தமிழர் விடுதலைப்போராட்டத்தை
காட்டிக்கொடுத்து வாழும் எட்டப்பர்கள்
கையூட்டாய் பெற்ற பெரும் தனம்

நல்லாட்சி அரசிலும் நாட்டை சூறையாடும் கறுப்பாடு
வந்த வழி மறந்து வாக்களித்த மக்களை ஏமாற்றிய
சூதாடியாய் ஜனாதிபதி மைத்திரி

மகிந்த தேரரால் ஈழத்தில் மலர்ந்த பௌத்தம்-
வளர்ந்த சாத்வீகம் மகிந்த அரசியல் வாதியால்
மடியுமோ? வன்முறை விடியுமோ? மனதில் அச்சம்

புத்தர் பெருமானால் மனம் மாறிய அங்குலிமாலாவும்
பௌத்த வழி நடந்து அர்கத் நிலையடைந்தார்
அரசியல்வாதி மகிந்தாவும் அர்கத் நிலையடைய ,
ஈழ அரசியலில் புதிய பொற்காலம் மலர, மனம்மாறுங்கள்
மகிந்தரே, புத்தர் பெருமான் அழைக்கின்றார்
செவி கொடுங்கள் சகோதரரே

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra*

# ருத்திர தரிசனம்-3

| எண் | பொருளடக்கம் |
|---|---|
| 61 | வெள்ளைப்புறா |
| 62 | வெள்ளி முளைக்காத நள்ளிரவு |
| 63 | வேண்டுதல் |
| 64 | வேங்கையின் காதலி- வெண்மேகம் |
| 65 | வேங்கையின் மைந்தன் |
| 66 | வேரும், விழுதும் |
| 67 | வெற்றி தோல்வி |
| 68 | வெற்றி விழா |
| 69 | விடுதலை |
| 70 | விடுதலைக் கோஷம் |
| 71 | விடுதலைப் பறவை |
| 72 | விழிப்பு |
| 73 | விழுப்புண் |
| 74 | விசனம் |
| 75 | வித்துடல் |
| 76 | யார் சொன்னார் |
| 77 | யார் சொன்னது தமிழா |
| 78 | யாசகம்- புத்தர் |
| 79 | யுத்தப் பேரிகை முழக்கம் |
| 80 | யுத்தம் ஒரு தொடர் கதை |
| 81 | யுத்தம், இரத்தம், யதார்த்தம் |
| 82 | யுத்தபூமி |
| 83 | பாதை மாறிய பயணம்- சிறுகதை |
| 84 | அவதாரம் |
| 85 | மண்ணில் விழுந்த மகுடம் |
| 86 | நிலவு தூங்கும் நேரம் |
| 87 | பக்தியும் அரசபதவியும் |